உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்:

திருக்கயிலாயத்தோற்றம்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 4 ஆடி பகுதி 10


## திருக்கயிலாய யாத்திரை

தாதார்கொன்றை தயங்குமுடியார் முயங்கு மடவாளைப்
போதார்பாகம் ஆகவைத்த புனிதர் பனிமல்கும்
மூதார்உலகின் முனிவருடனுய் அறம்நான்கு அருள்செய்த
காதார்குழையர் வேததிரளர் கயிலை மலையாரே.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் கயிலாய யாத்திரை மேற்கொண்டுள்ளார்கள் என்ற செய்தி அருள்வேட்கும் நெஞ்சங்களுக்கு மகிழ்வுதரும் செய்தியாகும். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் யாத்திரையை வெற்றிகரமாக நிறைவு செய்துகொண்டு ஆடி மாதம் இறுதியில் திருப்பனந்தாளுக்கு எழுந்தருள இருக்கிறார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள், ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி கயிலை சுவாமிகளாக அருள் ததும்ப எழுந்தருளும் திருநாளைப் பெரும் வரவேற்புடன் கொண்டாட அன்பர்கள் பக்தர்கள் திட்டமிட்டுக் கொண்டுள்ளார்கள். அதையொட்டி ஸ்ரீ குமரகுருபரர் ஆவணி இதழ் கயிலைச் சிறப்பிதழாக வெளிவரும்.

இந்த இதழில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அருள் பழுத்த கனிச் சுவையாகப் பண்டார மும்மணிக் கோவை இருபதாம் பாடலின் ஒருபகுதிக்கு விளக்கம் அருளியுள்ளார்கள். ஆண்டவன் குருவாக எழுந்தருளி யார் யாருக்கு எவ்வண்ணம் அருள்பாலிப்பான் என்ற விளக்கம் அதில் காணப்படுகிறது.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் அண்மையில் நடைபெற்ற ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மகேஸ்வர பூஜைக் கருத்தரங்கில் தலைமையேற்ற சிறப்பாசிரியர் திரு. அ. ச. ஞா. அவர்களின் தலைமையுரை 'குமரகுருபரர் கடவுட் கொள்கை' என்ற தலைப்பில் வெளியிடப் பெற்றுள்ளது.

சித்தாந்த சாத்திரங்கள் பற்றிய பேரறிஞர் திரு. மு. அருணாசலம் அவர்களின் கட்டுரையும் திரு கி. வா. ஜ. அவர்களின் திருவாரூர் நான்மணிமாலை விளக்கக் கட்டுரையும் மற்றும் வழக்கமான தொடர் அம்சங்களும் இந்தஇதழுக்கு அழகு செய்கின்றன.

நி-ஆ-ர்

# திருக்கயிலாயம்

## தா. ம. வெள்ளைவாரணம்

சைவ சம்பிரதாயத்தில் எந்த அடைமொழியும் இல்லாமல் ''கோயில்'' என்று சொன்னால் அது தில்லையை (சிதம்பரத்தை)க் குறிக்கும். அதேபோல எந்த அடைமொழியும் இல்லாமல் ''திருமலை'' என்று சொன்னால் அது திருக்கயிலாய மலையைக் குறிக்கும்.

திருக்கயிலாயமலை, இந்தியாவின் வட எல்லையாக உள்ள இமய மலைத் தொடரில் திபெத்துக்கு அப்பால் சுமார் 20,000 அடி உயரத்தில் உள்ள புனிதச் சிகரமாகும். இது பாடல் பெற்ற வட நாட்டுத் தலங்களில் ஒன்றாகும். இம்மலையை இராவணன் பெயர்த்தெடுக்க முயன்றபோது சிவபெருமான் தனது கால் விரலை ஊன்றி இம்மலையைச் சற்று அழுத்தினார். அதனால் இம்மலை நொடித்தான் மலை என்றும் அழைக்கப்படுகிறது.

வகைவகையாகத் தோற்றமளிக்கும் பல்வேறு சிகரங்கள் தொடர்ச்சியாகச் சூழ்ந்திருக்க அவற்றுக்கு நடுவே திருக்கயிலாய மலைச்சிகரம் பனிமுடி வெண்மையாகத் தோற்றமளிக்கிறது. இம் மலையைப் பரிவார சிகரங்களோடு வலம் வரும்போது கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு ஆகிய நான்கு திசைகளில் (குறிப்பிட்ட நான்கு இடங்களில்) இது காட்சி தருகிறது. இக்காட்சியினைக் கண்டோர் ''அக்காட்சி வருணிக்க ஒண்ணாத வனப்புடையது'' என்கிறார்கள்.

திருக்கயிலை மலைக்குத் தென்புறத்தே மானசரோவரம் என்ற ஏரி இருக்கிறது. இது சுமார் 50 மைல் சுற்றளவுடையது. பளிங்கு போல நீர் தெளிவாக இருக்கும். அன்னம் முதலிய பறவைகள் வாழ்கின்றன. யாத்திரிகர்கள் இங்கே நீராடுகிறார்கள். இவ்வேரியை உமா தேவியாகவும், கயிலாயச் சிகரத்தைச் சிவபெருமானாகவும் பாவித்து வழிபடுவது மரபாகும்.

திருக்கயிலையைத் தரிசிப்பதற்காகச் செய்யும் யாத்திரை மிகப் புனிதமானது. இந்துக்களின் சமய யாத்திரையில் அதிஉன்னதமானது. திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ **காசிவாசி எஜமான் சுவாமிகள்** அவர்கள் தற்போது திருக்கயிலாய யாத்திரை செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களின் யாத்திரை இனிய வாய்ப்புக்களைப் பெற நாமெல்லாம் கயிலாய நாதனை இறைஞ்சுவோமாக. கயிலைத் திருப்பதிகங்களைப் பாராயணம் செய்வோமாக.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச் சுவை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் 21-ஆவது அதிபர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

கடவுள் அன்பு வடிவானவன். விஞ்ஞானகலர், பிரளயா கலர், சகலர் என்னும் மூவகை ஆன்மாக்களுக்கும் எவ் வெவ்வாறு அநுக்கிரகிக்க வேண்டுமோ அவ்வவ்வாறு அநுக்கிரகிப்பவன்.

முதலாம் வகுப்புப் படிக்கும் மாணவனுக்கு ஒரு செய்தியை எப்படி எளிமையாகச் சொல்ல வேண்டும் என்று முறை இருக்கிறது. அந்த முறையைப் புலவர் வகுப்புப் படிக்கும் மாணவனிடம் வைத்துக் கொள்ளுவது சாத்தியமாகாது. கடவுளும் எல்லா ஆன்மாக்களையும் கடைத்தேற்றும் நிமித்தம் அவரவர்க்குத் தக்கபடி அருள் டாலிக்கிறுன்.

விஞ்ஞானகலர் ஆணவமலம் ஒன்று மட்டும் உள்ளவர்கள். இந்த ஆன்மாக்களுக்கு இறைவன் வெளிப்பட்டுத் தோன்ருமல் உள்ளத்துக்குள்ளேயே இருந்து தன்னை உணர்த்துகிருன்.

'வெள்ளிடைத் தோன்ருது உள்ளத்து உணர்த்தவும்'

என்று விஞ்ஞானகலருக்கு அருளும் திறத்தை ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் அறிவித்தருள்கிருர்கள்.

ஆணவம் கன்மம் என்னும் இரண்டு மலங்களின் சம்பந்தமுடையவர்கள் பிரளயாகலர். அவர்களுக்கு இறைவன் தொலை தூரத்திலிருந்து பார்வையினுல் அருள்செய்கிருன்.

'சேய்நிலை நின்று திருக்கண் சாத்தவும்'

என்று பிரளயாகலருக்கு அருள் செய்யும் திறத்தை ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் அறிவிக்கின்ருர்கள்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களின் சம்பந்தமும் உடையவர்கள் சகலர் எனப்படுவார்கள். இவர்கள் உள்ளத்திலிருந்து கடவுள் தன்னை உணர்த்திஞல் அதைஉணரும் ஆற்றலற்றவர்கள். கடவுள்தொலைவிலிருந்து திருக்கண்களால் அருள் செய்தால் அப்பெரு நிகழ்ச்சியை உணரும் பக்குவம் அற்றவர்கள். மொத்தத்தில் சாமான்யர்கள். நல்லூழ் இயற்றலும்,நல்லூழ் நுகர்ச்சியும் இல்லாதவர்கள். எனவே இவர்கள் திறத்தில் கடவுளுக்கு வேலை அதிகம். மும்மலங்களும் விரைவில் அழிவதில்லை இவர்களும் கடவுளை உணர்வதில்லை. எனவே மலங்களை அழித்துத் தன்னை உணரச் செய்ய வேண்டும்.ஆகவே, கடவுள் சகலரும் உய்யும் பொருட்டு மானுட வடிவெடுத்து வருகிருன். சகலருடன் ஆசார்யனுக உறைகிருன். அவர்கள்பால் வேருன்றி

யுள்ள மும்மலக் கிழங்கை வேருடன் தோண்டி எடுத்தெறி கிருன். குருவாக வந்து பக்குவம் தருகிருன்.

சாயா மும்மலச் சகலரேம் உய்ய
எம்முருக் கொண்டு எம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடும் அகழ்ந்தும்

என்று சகலருக்கும் இறைவன் அருளும் திறத்தை ஸ்ரீகுமர குருபர சுவாமிகள் அறிவிக்கிருர்கள்.

இவ்வாறெல்லாம் ஆன்மாக்களின் நிலைகளுக்கேற்ற வண்ணம் தொழில் புரிந்து, பின்னர் அவ்வான்மாக்களுக்கு அந்தமில் இன்பத்தை அறிவிக்கிருன். தன் பரத்துவநிலையை உணர்த்துகின்ருன். பரத்துவ நிலையாவது யாவும் கடந்த நிலை. அவ்வாறு செய்பவன் இங்கு யாராக இருக்கிருன் எனில் 'என் சற்குருவாக – மாசிலா மணியாக இருக்கிருன்' என்கிருர்.

சிற்பரம் உணர்த்தும் சற்குரு சாய!

என அதனையே விளியாக்கித் தம் குருநாதராகிய ஸ்ரீமாசிலா மணி தேசிகரை, ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் விளிக்கிருர்கள்.

பண்டார மும்மணிக்கோவையின் இருபதாம் பாட லாகிய இப்பாடலின் இறுதியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தமக்குச் சமயம் தீர்ந்த தனிப் பொருளை உணர்த்த வேண்டு கிருர். ஆணவம் கன்மம் மாயைகளின் தொடர்புடையார்க்கு அது உணர இயலுமா என்ற ஐயம் எழும். மும்மலத் தொடர்புகளை அகழ்ந்து நீக்கித் தாளுகிய அப்பரம் பொருளை உணர்த்துபவனும் சற்குருவே என்பதனை இவ் விளியினுல் தெளிவு செய்கிருர். குருவானவர் பக்குவம் அறிந்து உணர்த்துகின்ருர் என்ற கொள்கையை மறுத்துப் பக்குவம் உண்டாக்கி உணர்த்துகிருர் என்று ஸ்தாபித்தது இப்பகுதி.

—சிவ சிவ

சீனத் தத்துவ ஞானி 'லவட்ஸு' அறவுரைகள்

## 64. ஆரம்பமும் முடிவும்

தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

எது ஒன்று அசைவற்றுக் கிடக்கிறதோ அது கையால் பற்றுவதற்கு
எளிதாய் இருக்கும்
எது ஒன்று இன்னம் பகிரங்கமாக ஆகவில்லையோ அதை முன்
கூட்டியே தவிர்த்துவிடலாம்
எது ஒன்று (பனிக்கட்டியைப் போல) எளிதில் சில்லு சில்லாக
உடையக்கூடியதாய்-இருக்கிறதோ அது விரைவில் உருகிவிடும்
எது ஒன்று மிக நுண்ணியதாய் இருக்கின்றதோ அது
எளிதில் சிதறி விடுகின்றது.
ஒரு காரியம் எதிர்ப்படும் முன்னரே (உருவாகும் முன்னரே) அதை
அடக்கி நடத்து;
ஒழுங்கின்மையை அல்லது கலவரத்தை அது முற்றுவதற்கு முன்பே
அதை அடக்கிவிடு
ஒரு சாண் சுற்றளவு உள்ள ஒரு மரம் மிகச்சிறிய முளையாகத்
தான் தொடங்குகிறது
ஒன்பது அடுக்கு உள்ள ஒரு மாளிகை ஒரு மண்கட்டியில்
இருந்துதான் ஆரம்பமாகிறது
ஆயிரம் கிலோமீட்டர் தொலைவுள்ள ஒரு யாத்திரை
நம்முடைய பாதத்தில்தான் தொடங்குகிறது
எவனொருவன் செயற்படுவதில் முனைந்து இறங்குகின்றானோ அவன்
காரியத்தைக் கெடுக்கின்றான்,
எவனொருவன் வலுவாக பற்றுகிறானோ அவன் அப்பொருளைக் கை
நழுவ விடுகிறான்
மெய்ஞானியானவன் செயல்படுவதில் இறங்காத காரணத்தால்
அவன் காரியத்தைக் கெடுப்பதில்லை
அவன் கெட்டியாகப் பற்றாத காரணத்தால், ஒருபொருளைக் கை
நழுவ விடுவதில்லை
மனிதர்களுடைய விவகாரங்கள் நன்றாக முடிவதற்கு ஒரு
க்ஷணநேரம் தான் இருக்கும் போது,
பெரும்பாலும் சீரழிகின்றது,
ஆரம்பத்தில் மிகக் கவனமாக இருந்தது போலவே ஒரு

காரியம் முடிவடையும் காலத்திலும் கவனமாக
இருப்பதால் தோல்வி தவிர்க்கப்படுகின்றது.
ஆகையினால் மெய்ஞானியானவன் அவா இல்லாது இருத்தலை
அவாவுகிறான்,
பெறுவதற்குக் கடினமான பொருள்களை அவன் மதிப்பதில்லை
(அவற்றைப் பெற விருப்புவதில்லை),
கற்காமல் விடப்பட்டதைக் கற்கிறான்
மக்கள் திரள் இழந்ததை மீட்டுக் கொடுக்கிறான்.
இயற்கையின் இயல்பான போக்குக்கு உதவியாக இருப்பதற்காக
அந்தப் போக்கில் தலையிடுவதற்காக அல்ல;

## 65. கம்பீரமான லயம் (இசைவு)

டௌவை எவ்வண்ணம் பின்பற்றுவது என்பதை அறிந்த நம்
முன்னோர்கள் மக்களுக்கு அறிவு ஊட்டுவதைத் தம்
குறிக்கோளாகக் கொள்ளவில்லை
அதற்குமாறாக அவர்கள் அறிவிலிகளாக
வைத்து வந்தார்கள்.
மக்கள் அமைதியாய் வாழமுடியாததற்குக் காரணம் யாதெனின்
அபரிமிதமான அறிவுதான் காரணம்.
எவர்கள் ஒரு நாட்டை அறிவினால் ஆள முயல்கின்றார்களோ
அவர்கள் அந்நாட்டிற்குச் சாபக்கேடு
எவர்கள் ஒரு நாட்டை அறிவினால் ஆள முயல்வதில்லையோ
அவர்கள் அந்நாட்டிற்கு ஒரு நற்பேறு
இந்த இரண்டு தத்துவங்களை அறிந்திருக்கிறார்களோ அவர்கள்
பண்டைக் காலத்து நியமத்தை அறிந்தவர்கள்
பண்டைக்காலத்து நியமத்தை எப்பொழுதும் அறிந்திருப்பதற்குப்பெயர்
மெய்ஞான நற்பண்பு என்பதாகும்
எப்பொழுது அந்த மெய்ஞான நற்பண்பானது மிகவும் தெளிவாகவும்
எதிர்காலத்தில் நெடுந்தூரம் பயன்படக்
கூடியதும் ஆகின்றதோ
அப்பொழுது எல்லாக் காரியங்களும் தத்தம் ஆரம்ப
நிலைக்குத் திரும்பி விடுகின்றன.
அன்றுதான், அப்பொழுதுதான் கம்பீரமான லயம்
வெளிப்படும்,

# 66. அருவரைச்சந்துகளின்[1] எஜமானர்கள்

பெரிய ஆறுகளும், கடல்களும் அருவரைச்சந்துகளின் எஜமானர்கள்
பிரபுக்களாய் எப்படியானுர்கள்?
தாழ்ந்த நிலையிலேயே இருப்பதில் மிகவும் திறமைசாலிகளாய் இருந்த
காரணத்தால்.
இவ்விதமாகத்தான் அவர்கள் அருவரைச் சந்துகளின் பிரபுக்கள்
ஆனுர்கள்
ஆகையால் பொதுமக்கள் இடையில் தலைவனய் இருப்பதற்கு
ஒருவன் அவர்களுக்கும் தாழ்ந்தவர்கள் போலப் பேசவேண்டும்,
மக்களிடையில் அவர்கள் முன்னிலையில் தலைவனுக இருப்பதற்கு
ஒருவன் அவர்கள் பின்னுல் நடக்கவேண்டும்.
இவ்வண்ணமாகத்தான் மெய்ஞானியானவன் என்றும் மேலேயே
இருக்கின்ருன்.
மக்கள் அவனுடைய வழுவை உணர்வதில்லை.
அவ்ன் அவர்கள் முன்னணியில் நடக்கின்ருன்
மக்கள் அவனுக்குத் தீமை இழைக்க விரும்புவதில்லை
(அதற்கு மாருக உலக மக்கள் அனைவரும் அவனை என்றென்றும்
உயரத் தாங்கி நிற்க ஆசைப்படுகின்ருர்கள்).
மகிழ்கின்ருர்கள்
அவன் எவருடனும் போட்டி போடாததனுல்
உலகத்தில் யாரும் அவனுடன் போட்டி போட முடியாது.

---

1. அருவரைச் சந்து - ஒப்பிடுக "உருவ அருணீர் ஓட்டா அருவரைச் சந்தின் வான்சிறை கட்டி'' திருவாசகம், திருவண்டப் பகுதி வரிகள் 88, 89 ஆங்கிலத்தில் அருவரைச்சந்தை Ravines என் பார்கள்.



************************

# குமரகுருபரர் கடவுட் கொள்கை

## (காசிக் கலம்பகம்)

************************

அ. ச. ஞானசம்பந்தம் எம். ஏ.

(9-6-82 மகேஸ்வர பூசைக் கருத்தரங்கத் தலைமை உரை)

பொதுவாகக் குமரகுருபரர் போன்ற அநுபூதிமான்கள் பரம் பொருள்பற்றி அறிவு ஆராய்ச்சி யில் இறங்குவதில்லை. நால்வரில் தொடங்கி நாயன்மார்கள், ஆழ் வார்கள், குமரகுருபரர் போன்ற முனிவர்வரை மேலே சொல்லிய கருத்துப் பொதுவானதாகும். அறிவின் துணைகொண்டு ஆராயப் படும் பொருளில் தோய்வும் அனு பவமும் கிடைக்காது. உதாரண மாக அக்காரஅடிசில் செய்யும் முறைபற்றிய விளக்கம் பேசப் படும்போது அதன் சுவையை அறிய வாய்ப்பு இல்லை. இதன் எதிராக அதை வாயில் போட்டு மெல்லச் சுவைத்து அனுபவித்துக் கொண்டிருக்கும் நேரத்தில் சேர்க்கப்பட்ட பொருள்கள் எவை எவை? அவற்றின் இயல்புகள் யாவை? என்ற ஆராய்ச்சியில் யாரும் இறங்குவதில்லை. சாதாரண உலகியல் பொரு ளுக்கே இச்சட்டம் பொருந்து மானால் உலகியல் கடந்த ஒன்றைப் பற்றிப் பேசும்போது இச்சட்டம் இன்னும் வலுவாகப் பற்றுகிறது.

பரம்பொருள் பற்றி உபநிஷத காலத்திலிருந்து நம் முன்னோர்கள் ஆராய முற்பட்டதும் உண்மை தான்! அந்த ஆராய்ச்சியின் முற்றிய பயனாக ஒரு சில சித்தாந் தங்களை, முடிந்த முடிபான கருத்துக்களைக் கூறியதும் உண்மைதான். உதாரணமாக 'பூரணம் இதம்; பூரணம் உதஹ்' என்று தொடங்கும் உபநிடத வாக்கியமும், 'ஏகம் சத்' என்ற வேத வாக்கியமும் மாபெரும் உண்மையை நிறுவுவதை மறுப்பதற்கில்லை. ஆனால் இதனைக் கற்கின்றவர்கள் மனத் தில் இந்த வாக்கியங்கள் ஓர் ஒளியை அல்லது அமைதியை உண்டாக்குகிறதா? என்பது ஆராய்ச்சிக்குரியதாகும்.

மகா வாக்கியங்கள் ஒளியை உண்டாக்காமலா போய்விடும்? என்ற வினா நியாயமானதே! ஆனால், மனித மனத்தின் அமைப்பை அறியும் பொழுது இது உண்மை என்பது புலப்படும். ஏதேனும் ஒன்றில் லயித்து மனம்

அதில் ஈடுபட வேண்டுமேயானல் அப்படி லயிக்கப்படுகின்றபொருள் மனதனை எல்லைக்கும், அனுபவ அளவிற்கும் உட்பட்டதாக இருத்தல் வேண்டும். உதாரணமாகப் பரம்பொருளைப் பற்றி அனுபூதிமான்கள் இரண்டு பெருமக்கள் பாடுவதை இங்கே பார்க்கலாம்.

தொடுக்கும் கடவுள் பழம் பாடல்
தொடையின் பயனே!
நறைபழுத்த
துறைத்தீந்தமிழின் ஒழுகு நறும்
சுவையே! அகந்தைக் கிழங்கை
அகழ்ந்து
எடுக்கும் தொழும்பர்
உளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே!

என்று பாடுகிறர் ஓர் அனுபூதிமான்! ''நிர்குண, நிராமய, நிராலம்ப, நிராலஞ்சன'' என்ற முறையில் பாடுகின்றார் மற்றோர் அநுபூதிமான்!

முதலாவது பாடல் மனம், கற்பனை, மனித அனுபவம் என்பவற்றுக்குட்பட்டு நிற்றலால் படிப்பவரைக் கவ்வி ஈர்க்கிறது. ஆனல், இரண்டாவது பாடல் மனத்தின் எல்லைக்கு உட்படாத காரணத்தால் மனத்தைப் பற்றவில்லை. இரண்டு காரணங்களுக்காக அறிவின் அடிப்படையில் பரம்பொருள்பற்றி ஆராய்ச்சியில் இறங்க வேண்டாம் என்று நம் முன்னோர்கள் கருதினர்.

ஏதுக்களாலும் எடுத்த
மொழியாலும்
மிக்குச் சோதிக்க வேண்டா!

என்று பாடியவர் அறிவுக் சடலாகிய ஞானசபந்தப் பெருமான்தான். ஆனல் அவரே 'ஈருய் முதல் ஒன்ருய்' என்று தொடங்கும் பாடலில் அறிவினல் ஆராயத் தொடங்குவதையும் காணலாம்.

இவ்வாறு கூறுவதால் அப்பெருமக்கள் முன்பின் முரணுய்க் கூறிவிட்டார்களோ என்று நினைக்க வேண்டாம். சோதிக்க வேண்டா என்று கூறிய அதே பெருமான், மனிதர்கட்குள்ள இயல்பை நன்கு அறிந்தவர் ஆதலால் சோதிக்க வேண்டா என்று கூறுமல் 'மிக்குச் சோதிக்க வேண்டா' என்று கூறினர். அறிவு என்ற ஒன்று மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட தனி உடைமையாகும். எனவே, இறைவனல் கொடுக்கப்பட்ட அந்த அறிவைப் பயன் படுத்த வேண்டாம் என்று கூறுவது சரியன்று. அறிவைப்பயன்படுத்தவேண்டும்; ஆராய வேண்டும்; அதே நேரத்தில் அந்த அறிவின் எல்லை எவ்வளவு என்பதையும், ஆராய்ச்சி எவ்வளவு தூரம் போகவேண்டும் என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும். அந்த எல்லையைத் தாண்டி ஆராய்ச்சி போகுமேயானல் 'நுனிக்கொம்பர் ஏறினவர்கள் அஃது இறந்து ஊக்கின' கதையாகி விடும்.

இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டுதான் குமரகுருபரப் பெருமான் போன்றவர்கள் எத்தனையோ நூல்கள் இயற்றினாலும் அனைத்தையும் உணர்வுக்கு விருந்தாகவே படைத்தனர். இவற்றைக் கற்பதன் மூலம் கசிந்துருகி இறையருளில் தோய வேண்டும் என்பதுதான் இப்பெருமக்கள் உள்ளக் கிடக்கை! இவ்வாறு தோய்ந்து வெளிப்பட்ட அவர்கள் அனுபவந்தானே இப்பாடல்கள்? எனவேதான் இவர்கள் பாடல்கள் உள்ளத்தை உருக்குகின்றன.

அநுபூதிமான்களேயானாலும், அனுபவத்தில் தோய்ந்தவர்களே யானாலும், இப்பெருமான் போன்றவர்கள் மாபெரும் புலவர்கள் என்பதனையும், இலக்கிய இலக்கணக் கடலின் நிலைகண்டு உணர்ந்தவர்கள் என்பதையும் மறந்து விடக்கூடாது. எனவே, ஒரோவழி அறிவை அடிப்படையாகக் கொண்டு இப்பெருமக்களும் ஆராய்ச்சியில் புகுவதைக் காண முடிகிறது. நம் போன்றவர்கள் செய்யும் ஆராய்ச்சிக்கும் இவர்கள்செய்யும் ஆராய்ச்சிக்கும் வேறுபாடு நிரம்ப உண்டு. எவ்வளவு சிறந்த மொழியானாலும் மனிதனுடைய எண்ணத்தை முழுவதும் வெளியிடக் கூடிய ஆற்றல் அந்த மொழிக்கு - அந்த மொழியில் உள்ள எந்தச் சொல்லுக்கும் இல்லை என்பது உலகறிந்த உண்மை! Word is an Imperfect Vechicle of Thought என்பது மேனாட்டுத் திறனாய்வாளர்கண்ட உண்மை! இக்கருத்தையும் குமரகுருபரர் போன்ற பெருமக்கள் நன்கு அறிந்திருந்த காரணத்தால் பரம்பொருள்பற்றிய ஆராய்ச்சியில்புகும்பொழுது அறிவின்எல்லை, மொழியின் குறைபாடு, கருத்தை முழுவதும் விளக்கும் ஆற்றல் சொல்லுக்கு இன்மை என்பவற்றை நன்கு உணர்ந்தே ஆராய்ச்சியில் புகுகின்றார்கள். இவ்வளவு குறைபாடுகள் இருந்தும், மாபெரும் அறிஞர்கள் ஆதலால் வல்லவன் கையில் புல்லும் ஆயுதம்! என்னுமாறுபோல இப்பெருமக்கள் கையில் இந்த ஆராய்ச்சி ஈடிணையற்றதாக அமையக் காண்கிறோம்.

காசிக் கலம்பகத்தின் முதற் பாடல் மரபுபற்றிக் கொச்சகக் கலிப்பாவால் அமைந்ததாகும். இதிலமைந்த அராகம் என்ற உறுப்பில் வரும் நான்கு பாடல்களும் ஆராயத் தக்கவையாகும்.

உளதுஎன இலதுஎன ஒருவர்
ஓர் அளவையின்
அளவினில் அளவிடல் அரியதோர்
உருவினை

என்பது முதல் கண்ணி.

இறைவனைப் பார்த்து, 'அரியதோர் உருவினை' என்று பேசுகின்றார். எங்கும் நிறைந்ததாய், (சர்வ வியாபியாய்) உள்ள பொருளுக்கு உருவமும் உண்டு என்று சொல்வதில் தவறில்லை

காரணம், உருவுடைய பொருள் கள், உருவிலாப் பொருள்கள் என்ற இரண்டும் நம்முடைய சிற்றறிவால் கண்டு அனுமானிக்கக் கூடியவையாகும். அப்படியானால், 'அரியதோர் உருவினை' என்று அடிகளார் பேசுவதன் நோக்கம் என்ன?

**உருவும் வடிவும் :**

உருவம் வடிவம் என்பன வெவ்வேறு பொருளுடையன என்பதை மனத்தில் பதித்துக் கொள்ள வேண்டும். வடிவு என்று சொல்லும் பொழுது இன்னது என்று குறிப்பிட்ட பரிமாணமுடைய பொருளல்லாததைக் குறிப்பிடுகிறோம். உருவு என்று சொல்லும் பொழுது குறிப்பிட்ட பரிமாணம் உடைய ஒன்றைக் குறிப்பிடுகின்றோம். (A form with a definite shape)

அரியதோர் உருவினை என்று கூறியதால் பரம்பொருள் இன்னதோர் உருவினை உடையது என்று குறிப்பிட முடியாது என்று கூற வருகின்றார். இதற்குரிய காரணத்தை முதலடியில் விளக்கப் புகுகிறார் அறிஞர் பெருமான். எந்த ஒன்றையும் அறிவு அனுமானிக்க வேண்டுமானால், ஏதாவது ஓர் அளவையைக் கொண்டு தான் அனுமானிக்க முடியும். அளவைகளுக்குட்பட்ட ஒன்றைத் தான் அறிவு நிர்ணயிக்க முடியுமே தவிர, அளவைக்கு அப்பாற்பட்ட ஒன்றை அறிவு தன் எல்லைக்குக் கொண்டு வரவோ, நிர்மாணிக்கவோ இயலாது. இதைக் கூற வந்த பெருமான் பல்வேறு பகுதியினருக்கும் பொதுவான ஒரே அளவையை எடுத்துக் கொள்கிறார். அந்த அளவை யாவது யாது? உளது என்ற அளவையும் அதன் எதிரான இலது என்ற அளவையும் ஆகும்.

பரம்பொருள் உள்பொருள் தானே? எங்கும் நிறைந்திருக்கும் பொருள் தானே? என்றும் உள்ளது தானே? அப்படியிருக்க உளது என்ற அளவையால் அதனை ஏன் கூறமுடியாது என்ற வினா தோன்றுமல்லவா? உண்மை தான்! ஆனால், துரதிர்ஷ்ட வசமாக இங்கேதான் மொழியின் குறைபாடு வெளிப்படுகிறது. உளது என்ற உடன்பாட்டுச் சொல்லால் குறிக்கப்படும் பொருள் அந்த அளவைக்குட்பட வேண்டுமேயானால், குறிப்பிட்ட ஓர் உருவை அல்லது வடிவை யாவது பெற்றிருத்தல் வேண்டும். ஆகாயப்பூ, முயற்கொம்பு என்ற இல்பொருள்களைக் குறிக்கும் பொழுதுகூட, ஓர் உருவைத் தான் குறிக்கின்றோம். முயலும் கொம்பும் தனித்தனியே அறியப் படும் பொருள் ஆதலின் இவை இரண்டையும் ஒன்று கூட்டி அந்தக் கூட்டுப் பொருளுக்கு ஓர் உருவு கொடுத்துக் கற்பனையில் காண்கிறது அறிவு! இத்தகைய பொருள் உலகிடை இல்லை என்ற

காரணத்தால் இல்பொருள் என்ற பெயரைப் பெற்றதே தவிர, முயற்கொம்பு என்று கூறும்பொழுது, அறிவு உருவுடைய பொருள் ஒன்றையே நினைக்கின்றது. இதே அடிப்படையில் பார்ப்போமேயானால் உளது என்று கூறுகின்றவன் பயன்படுத்தும் அளவையின் அடிப்படையில் எந்த ஓர் உருவைக் கற்பனையில் கொள்கின்றானோ அந்த உருவினுள் தாம் பாட நினைக்கின்ற காசியம் பதிப் பெருமான் அகப்படவில்லை. ஆகவே தான் உளது என ஓர் அளவையின் நின்னை அறிய முற்படுவர் அறிய முடியாத உருவினை உடையாய்! என்று பேசுகிறார்.

இதன் எதிராக, இலது என்று சொல்லுகிறவன் உருவைப்பற்றிக் கவலைப்படவில்லையே; அவனுக்காவது அகப்படுகிறதா என்றால் இல்லை என்று பேசுகிறார் பெருமான்! இலது என்ற இன்மைப் பொருளைக் குறிக்கும் சொல் தனியே இல்லை. உடன் பாட்டில் உள்ள ஒன்றைத்தான் இலது என்று கூற முடியும். நம் சாத்திரங்கள் 'இலதென்றலின் உளது' என்று கூறிப் போயின!

எனவே, இலது என்று சொல்கின்றவன் தனக்கெனத் தனியிடம் இல்லாமல் உளது என்று சொல்லுகின்றவனை அடியொற்றி அவன் நிழலில் நிற்கின்ற காரணத்தால் உளது என்ற அளவைக்குச் சொல்லிய காரணங்களே இலதுக்கும் பொருந்தும். இதே கருத்தை நம்மாழ்வார் அழகாக,

> உளன் எனில் உளன்அவன்; உருவம்
> இவ்வுருவுகள
> உளன் அலன் எனில், அவன்
> அவரும் இவ்வருவுகள்
> உளன் என இலன் என இவை
> குணம் உடைமையில்
> உளன் இரு தகைமையொடு
> ஒழிவிலன் பரந்தே.
> (2090 திருவாய்மொழி)

அர்ச்சாவதாரக் கொள்கை உடையவர் ஆதலின் இப்பெருமான் 'உளன் எனில் உளன்அவன்; உருவம் இவ்வுருவுகள்' என்று கூறிப்போனார். உருவு கடந்து நிற்கின்றவன் என்ற கொள்கையை உடையவர் ஆதலால் 'உளது என்ற அளவைக்குக் கட்டுப் படாத அரியதோர் உருவினை' என்று குறிப்பிடுகிறார் குமரகுருபரப் பெருமான்.

அடுத்து உள்ள கண்ணி,

> ''இதுஎனல் அருமையின் எழுதரு
> மொழிகளும்
> அதுஅல எனும்எனின் எவர்
> உனை அறிபவர்

'இது எனல் அருமை' என்ற பகுதியைச் சற்றுச் சிந்திக்க வேண்டும். அது, இது என்ற சொற்கள் தமிழில் சுட்டுச் சொற்கள் என்று கூறப்படும். குறிப்பிட்ட உருவமும், கனபரிமாணமும்

உடைய பொருளை இது என்று சுட்டுதல் மரபு. பருப்பொருளாக அல்லாமல் கருத்தளவையில் நிற்கும் புகழ், இகழ், நன்மை, தீமை என்பவற்றைக்கூட சுட்டுச் சொல்லால் குறிப்பதில்லை. இது நல்லது, இது பாவம் என்று கூறும்பொழுது நல்லது, பாவம் என்ற உருவில்லாத கருத்தளவைக்கு மட்டும் பிடிபடுபவற்றை இது என்று சுட்டுகின்றோமே என்று கேட்கலாம்; ஆழ்ந்து சிந்தித்தால் இதில் உள்ள நுணுக்கம் விளங்கும். இது நல்லது என்று சொல்லும்பொழுது நல்லது என்ற பண்பை நாம் குறிப்பிடவில்லை; அதற்குப் பதிலாக நன்மை விளைவிக்கும் செயலையே குறிப்பிடுகிறோம். அதாவது இது நல்லது என்ற சொல்லால் இது நல்ல செயல், இது பாவமான செயல் என்று, செயலைத்தான் குறிப்பிடுகிறோம். எனவே சுட்டுச் சொல்லால் குறிப்பிடவேண்டுமாயின் குறிப்பிட்ட பரிமாணமுடைய பொருளாக அது இருத்தல் வேண்டும். பரம்பொருள் இதனைக் கடந்ததாதலின் சுட்டுச்சொல்லால் குறிப்பிட முடியாதது என்ற கருத்தை 'இது எனல் அருமை' என்று பேசுகிறார் பெருமான்.

சுட்டுச் சொல்லால் ஒரு பொருளைக் குறிப்பிடும்பொழுது மற்றொரு தொல்லையும் வந்து சேரும்! உதாரணமாக, பிரமம் அதுவா? என்ற வினாவிற்கும் இது பிரமமா என்ற வினாவிற்கும் உள்ள வேற்றுமையை அறிய வேண்டும். பிரமம் இதுவா என்ற முதல் வினாவிற்குத் தாராளமாக ஆம் என்ற விடை கிடைக்கும். இது பிரமமா? என்ற வினாவிற்கு ஆம் என்று விடை கூறினால் விளைவது ஆபத்துத்தான். ஒரு குறிப்பிட்ட பொருளை இது பிரமம் என்று சொல்லிவிட்டால் அப்பொருள் அல்லாத பிறவெல்லாம் பிரமம் அன்று என்ற முடிவுக்கு வர நேரிடும். எனவேதான் வேத வாக்கியம் இது பிரமமா? என்ற வினாவிற்கு இது அல்ல என்ற பொருளில் 'நேதி' என்று கூறிப் போயிற்று! சுட்டினால் வருகின்ற ஆபத்தை உணர்ந்தவராதலின் பெருமான் எழுதருமொழியாகிய வேதத்திலும், வடமொழியிலும் கூட இது என்று சுட்டுதல் முடியாத காரியம் என்பதை அழகாக 'எழுதருமொழிகளும் இது எனல் அருமை' என்று குடுப்பிடுகின்றார்.

இப்படி இது பிரமமா? என்ற வினாவிற்கு வருகின்ற நேதி என்ற விடையை 'அது அல எனும்' என்று அழகாக விளக்கம் தருகின்றார். எனவே இறைவன் சுட்டப்பட முடியாதவன் என்ற கருத்தை அழகாய்ச் சொல்கிறார்.

அடுத்து நிற்கின்ற பகுதி 'எவர் உனை அறிபவர்' என்பதாகும். சொல்லின் வேந்தராகிய குமரகுருபரர், அறிபவர் என்ற சொல்லை இவ்விடத்தில் அறிந்தே

கையாள்கின்ருர். அறிதல், தெரிதல், உணர்தல் என்ற மூன்றும் இக்காலத்தில் ஒரே பொருளில் பயன்படுத்தப் பட்டாலும் பொருள் வேறுபாடுடைய சொற்களாகும்.

அறிதல் என்பது நுணுக்கமான அறிவின் தொழிலாகும் தெரிதல் என்பது புறமனத்தில் நிகழ்கின்ற செயலாகும். உணர்தல் என்பது உணர்ச்சிகட்கு இடனுகிய அகமனத்தில் நிகழ்கின்ற ஒன்ருகும். இம் மூன்றிற்கும் உள்ள வேறுபாட்டை நன்கு அறிந்து நம் முன்னேர் மிகக் கவனமாக இச் சொற்களைப் பயன்படுத்தி உள்ளனர். முழுமுதல் பொருளைக் காண்டலும், உணர்தலும், பெரியோர்களுக்கு இயலுகின்ற ஒன்றுதான்.

''கண்ணால் யானும் கண்டேன் காண்க!''

என்று கூறிய மணிவாசகப் பெருமான்,

''உண்டு ஓர் ஒண்பொருள் என்று உணர்வார்க்கெலாம்
பெண்டிர் ஆண் அலி என்று அறிவொண்கிலே''

என்று பாடிய அதே பெருமான்,

''கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறியோம் உனைக் கண்டு அறிவாரை''

என்று பாடுகிருர். எனவே,முதல் இடத்தில் கண்டதையும், இரண்டாவது இடத்தில் உணர்ந்ததையும் கூறிய அவர், மூன்ருவது இடத்தில் உன்னை அறிந்தவர்கள் யாரையும் கேட்டது கூட இல்லை என்று பேசுகிருர். எனவே, இறைவனைக் காண்பவர்களும், உணர்பவர்களும்கூட அறிவின் துணை கொண்டு அவனை அறிய முடியாது என்ற பேருண்மையை மணிவாசகப் பெருமான் என்ற அநுபூதிமான் நன்கு விளக்கியுள்ளார். இக்கருத்தை அடியொற்றியே இந்த முனிபுங்கவரும் 'எவர் உனை அறிபவர்' என்று கேட்கிருர். அவனை உணர்பவர் உண்டு; அவனைக் காண்பவர் உண்டு, ஆனால் அறிபவர் எவரும் இலர் என்பது கருத்தாகும்.

மூன்ருவதாக உள்ள தாழிசை,

''அவன்அவள் அது எனும் இவைகளில் உளன் இலன்
எவன்அவன் என எதிர்தரு தகைமையை''

என்பதாகும்.

இந்தத் தாழிசையிலும் சுட்டினுல் வரும் பிரச்சனையையே அடிகளார் எடுத்துக் கொள்கிருர். சைவ சித்தாந்தத்தின் உயிர் நாடியாக உள்ள அவன், அவள், அது என்னும் மூன்று சுட்டுக்களையும் எடுத்துக் கொண்டு தமக்கே உரிய முறையில் ஒரு புதிய விளக்கம் தருகிருர். இம்முச் சுட்டுக்களாலும் சுட்டப்படுகின்ற பொருள் எதுவோ அதுவே முழு

முதற் பொருள் என்று சொல்கின்றவர்கள் ஒரு புறம்! இவர்களின் எதிரே, நான் என்ற தற்சுட்டு இல்லாத பொழுது இம் மூன்று சுட்டுக்களும் பயனற்றுப் போகும். உலகியல் ரீதியாகப் பார்க்கும பொழுது, 'நான்'. என்ற அடிப்படையில் பார்க்கின்ற பொழுதும், நாம் வேறு நம்மைச் சுற்றியுள்ள இப்பிரபஞ்சம் வேறு என்ற நிலை ஏற்படுகின்றது அப்பொழுது, 'நானைச்' சுற்றி (அகங்காரம்) 'எனது' (மமகாரம்) வளர, எனதின், பயனாய(மமகாரம்)தாய், தந்தை, என்ற உறவுகளும், எனது வீடு, எனது சொத்து என்ற உரிமைகளும் வளரக் காண்கிறோம். இத்தனைக்கும் மூலகாரணமாக இருக்கின்ற நான் என்பது மயக்கம்காரணமாகவோ வேறு காரணமாகவோ, அழியும் பொழுது இந்த மமகாரமும் அழியக் காண்கிறோம்.

இந்த இரண்டு பொருளும் கிடைக்குமாறு இக்கண்ணி அமைக்கப்பெற்றுள்ளது. அவன், அவள், அது எனும் அவைகளின் உளன் எவனோ அவன் இவன் என்பது இரண்டாவது பொருள். அதாவது அவன், அவள், அது எனப்படும் மூன்று சுட்டுக்களாற் சுட்டப்படும் பொருள்களில் 'உளன் அவன் எவன்' என்று யாரைக் குறிக்கின்றோமோ அவன் இவன் என எதிர் தருகின்றான். சுட்டப்பட்ட பொருளிலும், அவற்றிற்கு அப்பாலும் உளன் என்பதை மூத்துணை அழகாக விளக்குகின்றார் பெருமான். 'ஈறாய் முதல் ஒன்றாய்' என்று தொடங்கும் ஞானசம்பந்தரின்-தேவாரப் பாடலின் இறுதி அடியாகிய 'வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம் மிழலையே' என்பது இங்கு ஒப்பிடத்தக்கது.

இதுவரை அறிவின் துணை கொண்டு இறைப் பொருளை ஆராய முற்பட்ட பெருமகனார் நான்காவது கண்ணியில் இந்த ஆராய்ச்சி எவ்வாறு செய்யப்பட வேண்டும் என்பதையும் விரிவாக கூறத் தொடங்குகிறார்.

''அறிபவர் அறிவினுள் அறிவுகொடு
அறிவுறு
நெறியலது ஒருவரும் அறிவரு
நிலைமையை''

என்பது பாடல்.

ஆன்மாவினுள் இருக்கும் அறிவு இருவகைப்படும் ஒன்று புறத்தே உள்ள பொருள்களை ஆராயும் இயல்புடையது. மற்றொன்று அகத்தே உள்ளதை (தன்னைத் தானே ஆராய முற்படும் அறிவு எனினும் அமையும்) ஆராய்வது. இந்த இரண்டாவது அறிவை அடிகளார் அறிவினுள் அறிவு என்று கூறுகிறார். இந்த இரண்டாவது அறிவின் துணை கொண்டு ஓரளவு இறை இயல்பை அறிய முற்படலாம் என்பதும் முன்னோர் துணிவு. ஆனால் அவ்வாறு அந்த

இரண்டாவது அறிவு தொழிற் படும் பொழுது அதனை இறை யருள் கொண்டு செலுத்த வேண்டும். அவ்வாறு கொண்டு செலுத்தும் நெறியை முனிவர் 'அறிவுறு நெறி' (அறிவுறுத்தப் பட்ட நெறி) என்று கூறுகிறார். எனவே ஆன்மாவினுள் இருக்கும் இரண்டாவதான நுண்ணிய அறிவு இறையருள் செலுத்தும் நெறியில் விலகாமற் சென்றால் ஓரளவு அவனை அறிய முடியும். அந்த நெறியை அல்லாது பிற வழியிற் சென்றால் எஞ்சுவது இருளே தவிர விளக்கம் அன்று என்கின்றார்.

இதே கருத்தை மணிவாசகர் ''அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்.........''என்று கூறுகிறார். அவன் அறிவுறுத்தும் நெறி அலது பிற நெறியில் செல்பவர் அறிய முடியாத நிலை மையை! என்று இப்பெருமான்கூறு வதைத் தாயுமானப் பெருந்தகை

'அருளால் எவையும் பார் என்றான்
அதனை அறியாது சுட்டி
என் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருளின்றிக் கண்ட
என்னையுங் கண்டிலன் என்னேடி
தோழி!

என்று பேசுகிறார்.



# ஆலய பூஜைப் படிக்காசு நிதி

## நிதி அளித்த அன்பர்களின் பட்டியல்

| | | |
|---|---|---|
| | 4—6—82 வரை கூடுதல் | 14179-10 |
| திரு | சோமசுந்தரம், மதுரை | 25-00 |
| ,, | நளாயினி ,, | 5-00 |
| ,, | மாயாதரங்கிணி ,, | 5-00 |
| ,, | ஆர். சுவாமிநாத பிள்ளை, ஆக்கூர். | 101-00 |
| ,, | எஸ். ஆர். வி. இராம், சென்னை-20 | 5-00 |
| ,, | துர்க்கா குடில் அப்பு குடந்தை. | 5-00 |
| ,, | T. M. வெள்ளைவாரணம், திருப்பனந்தாள் | 10-00 |
| | 2—7—82 வரை கூடுதல் | 14335-10 |

# விடையே விடை

கி. வா. ஜகந்நாதன்

யார் எல்லாத் தேவர்களுக்கும் நாதனாக இருப்பவன்? இதற்கு வெவ்வேறு வகையில் விடை அளிப்பார்கள். குமரகுருபரர் ஒரு காரணத்தைச்சொல்லி, சிவபெருமானை நாதன் என்று சொல்லுகிறார்.

நூல்களை நன்கு கல்லாதவர்களே யார் பரம்பொருள் என்று தெரியாமல் மயங்குகிறார்கள். இதுபற்றி யாரும் தர்க்கம் இட வேண்டிய அவசியமே இல்லை. சிவபெருமானையும் அவன் வாகனத்தையும் கண்டு உணர்ந்தவர்களுக்கு உண்மை புலப்படும்.

''நல்லவர்கள் போற்றித் தொழும் கமலாலயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே நாதன்'' என்று உணர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள். உணராதவர்களோ, ''கமலை நாதனா நாதன்?'' என்ற வினாவை எழுப்புகிறார்கள். அவர்கள் சொல்வது அறியாமையால் எழும் கடா. (வினா,) அதற்கு எப்படி விடை கூறுவது?

'நல்லார் தொழும் கமலை நாதனே
நாதன்? எனக்
கல்லாதார் சொல்லும் கடாவிற்கு'
[நாதனே - நாதனா; ஏகாரம்- வினா.]

இந்தக் கடாவிற்கு எம்பெருமான் ஊர்ந்துவரும் இடபவாகனமாகிய விடையே விடையாக இருக்கிறதாம். அந்த விடை பகைவர்களை வெல்லும் பேராற்றல் உடையது.

வெல்லும்
விடையே விடை ஆக.

அது எப்படி விடையாகும்? இறைவன் திரிபுரசங்காரம் செய்தபோது அவனுடைய வாகனமாக விடையுருவம் எடுத்துத் திருமால் தாங்கினார்; திருமால் ''தடமதில்கள் அவை மூன்றும் தழல் எரித்த அந்நாளில், இடபமதாய்த் தாங்கினான் திருமால் காண் சாழலோ'' என்பது திருவாசகம். சிவபெருமானைத் தாங்கியதால் திருமால் அப்பெருமானுக்கு அடங்கியவர் என்பதும், சிவபெருமானே முதல்வன் என்பதும் தெளிவாகும். ஆகவே, இறைவனுடைய வாகனமாகிய விடையைக் கண்டவர்களுக்கு ஏனைத் தேவர்கள் அவனுக்குப் பணி செய்பவர்கள் என்பதும், அவனே அவர்களுக்கெல்லாம் தலைவன் என்பதும் தெளிவாகும். அப்படி

இருக்க ஐயம் உண்டாக இடம் ஏது?

என்றாலும் இந்த உண்மையை உணராதவர்கள் ஐயுறுவார்கள். நல்லோர் அந்த உண்மையை உணர்ந்து அவனையே நாதனாகப் போற்றி நிற்க, இடையே மெய்யை உணராதவர்கள் ஐயுற்று மயங்குவது என்ன அறியாமை?

மெய் உணரார் ஐயுற்று
இடையே மயங்கும் இது என்?

மெய்யுணர்ந்த நல்லார் அவனைத் தொழுகிறார்கள், மெய் உணராத பொல்லார் இடையே மயங்குகிறார்கள். அந்த நல்லார் அவர்களுக்கு ஐயத்தைத் தெளிவிக்க வேண்டிய அவசியமே இல்லாமல் அவன் ஏறும் வாகனமே அவனுடைய முழுமுதல் தன்மைக்குக் கரியாக நிற்கிறது.

கல்லாதவராகவும் மெய்யுணர்வு இல்லாதாராகவும் உள்ளவர்களே, ''கமலை நாதன் தானோ நாதன்?'' என்று கடா விடுப்பார்கள். அதற்கு விடையே விடையாக நிற்கிறது.

நல்லார் தொழும் கமலை நாதனே
நாதன்எனக்
கல்லாதார் சொல்லும் கடாவிற்கு–
வெல்லும்
விடையே விடையாக, மெய்உணரார்
ஐயுற்று
இடையே மயங்கும்இது என்?

மெய்யுணர்ந்த நல்லார் ஐயம் அகன்று இவனே முழுமுதற் கடவுள் என்று தெளிந்து வழிபடும் கமலாலயமாகிய திருவாரூர்ப் பிரானாகிய தியாகேசனை, கமலைநாதனா தலைவன் என்று கல்லாதார் சொல்லும் வினாவுக்கு, வெற்றிகொள்ளும் இடபவாகனமே விடையாக இருக்கவும், கல்லாரும் உண்மை உணராதவர்களுமாகிய பொல்லாதார் ஐயம்கொண்டு, நடுவிலே மயக்கம் அடைகின்ற இச்செயல் என்ன பேதைமை?

[நல்லார் என்பதற்குப் பின் வரும் கல்லாதார், மெய்யுணராதார் என்பவற்றுக்கு மறுதலையான கற்றார், மெய்யுணர்ந்தார் என்பவற்றையும் கூட்டி உரை செய்க. கமலை - திருவாரூர்; நாதனே–நாதனா; ஏகாரம் வினா. நாதன்–தலைவன்; முழுமுதற் கடவுள்; கடா-வினா; விடை - இடபம்; விடையாக - வினாவுக்குரிய விடையாக இருக்கவும்; கல்லாதார்– மெய்யுணரார் என்பவற்றோடு நல்லார் என்பதற்கு மறுதலையாகிய பொல்லார் என்பதையும் கூட்டிப் பொருள் கொள்க. இது-இந்தச்செயல்; என் - என்ன பேதைமை.

கடாவிற்கு விடை விடை என்றது ஒரு நயம். கண்கூடாகத் தெரியும் ஒன்றன் உண்மையை உணராமல் வீணே ஐயுறுவது என்ன பேதைமை என்றார்.]

இது திருவாரூர் நான்மணி மாலையில் உள்ள 22 - ஆவது பாட்டு.

# சித்தாந்த சாத்திரங்கள் வரலாறு

## மு. அருணாசலம்

### 4. ஆனூர் சிங்காரவேலு முதலியார் - மூலப் பதிப்பு

இவர் (1855 - 1931) அபிதான சிந்தாமணி தொகுத்தவர். சித்தாந்த சாத்திரங்களின் மூலத்தை மட்டும், மதுரை நாயகம் பிள்ளையை அடுத்துப் பதிப்பித்தவர் இவரே. பல பகுதிகளாகிய இவற்றைச் சோளங்கிபுரம் அருணகிரி முதலியார் வேண்டுகோளின் படி 1899ஐ ஒட்டிப் பரிசோதித்துத்தர, இவரது மாணாக்கரான கல்குளம் கி. குப்புசாமி முதலியார் சென்னை மவுண்ட்ரோடு கமர் ஷியல் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிட்டார். கையடக்கமான சிறு வடிவு. நூல்கள் இறுதியில் பாட்டு முதற் குறிப்பு உள்ளது. இவரே முதன் முதல் உமாபதி சிவாசாரியர் நூல்களைச் "சித்தாந்த அஷ்டகம்" என்று பெயரிட்டுப் பதிப்பித்தவர். இவர் தமக்கு முன் வெளியாயிருந்த மூலப் பதிப்பையோ உரைப் பதிப்புக்களையோ குறிப்பிடவில்லை.

### 5. சைவ சித்தாந்த மகா சமாஜ முதல் பதிப்பு - உரைப்பதிப்பு

1934 ஆம் ஆண்டில் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் காரிய தரிசியாயிருந்த ம. பாலசுப்பிரமணிய முதலியார் சித்தாந்த சாத் திரங்கள் பதினான்கையும் பழைய உரைகளோடு சாது அச்சுக் கூடத் தில் பிழையில்லாத அடக்கவிலைப் பதிப்பாக வெளியிட்டார். அவர் காரியதரிசியாக இருந்த காலத்தில் தேவார திருவாசகங்களை மிக மலிவான விலையில் அடக்கவிலைப் பதிப்பாக எளிய சைவர்களுக்கும் வெளியிடவேண்டும் என்ற ஆர்வத்தில் பன்னிரு திருமுறைகளையும் பலமுறை மிக்க மலிவான அழகான அச்சில் வெளியிட்டார். அம் முயற்சியின் தொடர்ச்சியே சில சித்தாந்த சாத்திர உரை வெளியீடு. இவ் வெளியீட்டின் முழுப் பொறுப்பையும் ஏற்றவர்கள் அக்காலம் சென்னை பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையில் ரீடராயிருந்த ச. அனவரத விநாயகம் பிள்ளையும் தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரி யராயிருந்த ச. வையாபுரிப் பிள்ளையும். இருவரும் சிறந்த சைவ சீலர்கள். ஏடுகள் பரிசோதனையில் டாக்டர் சாமிநாதய்யரை ஒத்த நிபுணர்கள். இவர்களுடைய பார்வை சைவ சாத்திரங் களுக்குக் கிடைத்தமை சமாஜமும் சைவ உலகமும் செய்த பாக்

கியம் எந்தப் பயனும் கருதாது நல்ல சாத்திரப் பதிப்பு வெளி வருவது ஒன்றையே நோக்கமாகக் கொண்டு உழைத்தவர்கள். எவ்வளவு பணச் செலவு செய்தாலும் அந்தப் பதிப்பையொத்த திருத்தமான அழகான பதிப்பு இனி ஒரு காலும் வெளிக் கொணர முடியுமா என்பது சந்தேகமே.

இப்பதிப்பின் ஒரு சிறப்பு இதில் அடங்கிய வேறு உரைகள் முன்னமே சண்முக சுந்தர முதலியார் பதிப்பித்த உரைகளை அப்படியே நாகலிங்க முதலியார் எடுத்துக் கொண்டு சிலவற்றை விட்டுப் பதிப்பித்தார். இப்பதிப்பில் அனவரத விநாயகம் பிள்ளையின் பெரு முயற்சியால் சிவப்பிரகாசம், திருவருட்பயன், உண்மை நெறி விளக்கம் என்ற மூன்று நூல்களுக்கும் முன்னமே அச்சிடப் பெறாத பழைய உரைகள் ஏட்டுச் சுவடிகளிலிருந்து பிரதி செய்யப்பட்டு, புதிதாக வெளி வந்தன. பிள்ளையவர்களே தம் சொந்த கையெழுத்தில் உரைகளை ஏடுகளிலிருந்து பிரதி செய்திருந்தார். சாத்திரங்கள் பற்றிய இவருடைய அறிவும் ஆர்வமும் ஆச்சரியமானவை. சித்தாந்த சாத்திரங்கள் பலவற்றுக்கும் அச்சிடப்படாத பல உரைகள் ஏடுகளில் உள்ளன. அவற்றுள் சிலவேனும் இப்பதிப்பில் புதிதாய் வெளி வந்தமை வரவேற்கத்தக்கது.

இனி 14 சாத்திரங்கள் யாவை என்பது பற்றி இப்பதிப்பில் ஒரு புதிய பார்வை செய்யப்பட்டது ''உந்திகளிறே'' என்ற பாடலில் சொல்லப்பட்ட பதினன்கில் கண்ட உண்மை நெறி விளக்கம் உமாபதி சிவாசாரியர் செய்ய வில்லை என்றும் இதைச் சீகாழித் தத்துவநாதர் (சிற்றம்பல நாடிகளின் மாணுக்கர்) செய்தார் என்றும், இது காணப்பெருமல் சீகாழிச் சிற்றம்பல நாடிகள் செய்த துகளறு போதமே பதினன்கில் ஒன்ருக ஏடுகளில் காணப் பெறுகிறது என்றும் புதிய கருத்துக்கள் ஏடுகளின் துணை கொண்டு இப்பதிப்பில் முதன் முதலாக வெளியிடப்பெற்றன. இவற்றுக் கேற்ப இப்பதிப்பில் உண்மை நெறி விளக்கம் உரையோடு அச்சிடப் பட்ட போதிலும் துகளறு போதம் மூலமும் சேர்க்கப்பட்டது.

இது பற்றி இங்கு விரிவாகப் பேசவில்லை; பின்னே ஒவ்வொரு சாத்திரப் பதிப்பையும் ஆராயும் போது உண்மை நெறி விளக்கம் பற்றி விரிவாகப் பேசுவோம். ஆனல் இங்கு ஒரு செய்தி மட்டும் குறிப்பிட வேண்டும். எம்மிடமுள்ள ஒரு பழைய ஏட்டுப் பிரதியில்

(சுமார் 250 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும்) சித்தாந்த சாத்திரங்கள் யாவை என்பதை வரையறை செய்து பின்வருமாறு ஒரு குறிப்புக் காணப்படுகிறது. இது தனி ஏட்டில் உள்ளது. ஓரத்தில் ஏட்டின் தலைப்பு போடும் இடத்தில் மெய்கண்ட சாத்திரம் பதினாலுக்கும் வகை'' என்ற தலைப்புக் காணப்படுகிறது. பின் வருவது ஏட்டிலுள்ள வாசகம்:

''மெய்கண்ட சாத்திரம் பதினான்கும் திருவுளம் பற்றியருளியது வரன்முறை: மெய்கண்ட சுவாமிகள் திருவுளம் பற்றியருளியது சிவஞானபோதம்-1; அருணந்திசிவாசாரியர் திருவுளம் பற்றியது-சிவஞான சித்தியார்-1 இருபா இருபது-2; உமாபதி சிவாசாரியர் திருவுளம் பற்றியது - சிவப்பிரகாசம், திருவருட்பயன், போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடு தூது, சங்கற்ப நிராகரணம், வினாவெண்பா, கொடிக்கவி ஆகக் கொற்றவன்குடி சுவாமிகள்-7: உண்மை நாயனார்-உண்மை விளக்கம்-1; உய்யக் கொண்ட சுவாமிகள் ; திருவுந்தியார்-1; ஆளுடைய நாயனார் ; திருக்களிற்றுப்படியார் 1: சிற்றம்பல நாடி சுவாமிகள் துகளறு போதம் - 1; ஆகச் சாத்திரம் பதினான்கு சம்பூர்ணம்''.

இக்குறிப்பில் சில கருத்துக்கள் பிழை. உண்மை நாயனார் என்று சொல்வதில்லை. திருவதிகை மனவாசகம்கடந்தார் என்பதே அவருடைய பெயர். மற்றும் திருக்களிற்றுப்படி செய்தவர் ஆளுடைய நாயனார் அல்ல; அவருடைய மாணாக்கர் திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார். உய்யக் கொண்ட சுவாமிகள் என்று இங்கு சொல்லப் படுபவர் உய்ய வந்த தேவநாயனார். இருப்பினும், இக்குறிப்பு மெய் கண்ட சாத்திரம் என்று சொல்வதும், உண்மை நெறி விளக்கத்தைச் சொல்லாமல் துகளறு போதத்தைச் சொல்வதும் காணத்தக்கன.

இப் பதிப்பில் நூல்தோறும் அனவரத விநாயகம் பிள்ளை யவர்கள் ஆசிரியர் நூல் உரை காலம் பற்றிய குறிப்புக்கள் எழுதி யிருப்பது அறிஞர்களுக்குப் பெருவிருந்தாகும்:

6. தருமபுரம் சித்தாந்த சாத்திர மூலப்பதிப்பு

அடுத்த சிறந்த வெளியீடு, 1942 ஆம் ஆண்டில் தருமையா தீனத்தில் மகாசந்நிதானமாக இருந்த ஸ்ரீ சண்முகதேசிகர் காலத்தில் வெளியான சித்தாந்த சாத்திர மூலப் பதிப்பாகும்: இதற்குக்

காரணமாயிருந்தவர் அக்காலத்தில் முதியவராயிருந்த மௌனமடம் ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள். இருண்டு மூலையிலே கிடந்த இந்த ஆதீனத்தை முற்றத்தே கொண்டுவந்து விட்டவர். இப் பெரியவர் 1941 ஆகஸ்ட்28-31 தேதியில் தருமபுரத்திலேயே ஒரு விரிவான மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு நடத்தினர். அதன் மூலம் அவர் சமாஜக் காரியதரிசி பாலசுப்பிரமணிய முதலியாரோடு தொடர்பு கொண்டிருந்து, சென்னை சாது அச்சுக் கூடத்தில் சித்தாந்த சாத்திர மூலத்தை அச்சிடச் செய்தார். மடத்தின் சார்பில் சாத்திர அச்சுப் புருப்களை பார்வையிட்டவர் இலக்கணம் முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்.

முதல் பாரம் அச்சுக்கோத்த சமயம் யாம் அங்குப் போக நேர்ந்தது. எமக்குப் பலநூல்கள் மூலம் அவ்வச்சகத்தோடு நெருங்கிய தொடர்பு இருந்தது. தவிர, சமாஜ முதல்பதிப்பு சித்தாந்த உரை வெளியீடு வந்தபோது (1935 இல்) சென்னை எழும்பூரில் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் சுவாமிகளிடம் சில சித்தாந்த சாத்திரங்களைப் பாடம் கேட்டிருந்தமையால் இப்பதிப்பில் ஈடுபாடு ஏற்பட்டது; யாமாக வந்து ஏடுகளை வைத்து ஒப்பு நோக்கியும் புரூப் பார்த்தும் கொடுப்பதாக ஏற்றுக்கொண்டு செய்து வந்தோம். எம்மிடம் அப்போது இரண்டு சாத்திர ஏடுகள் இருந்தன அவற்றையும் வையாபுரிப்பிள்ளை ஏட்டையும் ஆராய்ந்து ஒப்பு நோக்கிப் பாட பேதங்கள் திருத்திக் கொடுத்தோம். அப்போதெல்லாம் மூன்று முறை புரூப் வரும். காலி புரூப், பக்க புரூப், பாரம் புரூப். பாட பேதங்கள்முதலியன காலி புரூப்பில் செய்து கொடுப்பது வழக்கம். இதுவே அச்சகத்தாருக்கு எளிதாயிருக்கும்.

அடிக்குறிப்பில் அமைந்த பாடபேதங்களைப் பார்த்த ஸ்ரீ முத்துக்குமார சுவாமித் தம்பிரான் ஒரு சமயம் கேட்டார்கள்: ''உண்மையான பாடம் ஒன்றுதானே இருக்கும்? பல தருவதால் என்ன பயன்?''

''சில உரையாசிரியர்கள் வெவ்வேறு பாடங்கொண்டு வெவ்வேறு விதமாக விளக்கம் எழுதுகிறார்கள். ஆகவே இதுதான் உண்மைப் பாடம் என்று துணிந்து நாம் சொல்வது கஷ்டம். பல பாடங்களும் இருப்பது பிற்காலத்தார் பொருள் வரையறைக்கு உதவியாயிருக்கும்'' என்று யாம் பதில் சொன்னோம்.

இப்பதிப்பையே அடிப்படையாக வைத்துப் பாட பேதங்களை மட்டும் நீக்கி, திரு. முத்து சு. மாணிக்கவாசக முதலியாரைக்

கொண்டு பின்னர் ஒரு பதிப்பு. தருமபுரத்தார் வெளியிட்டார்கள் இருடபினும், முந்திய பதிப்புக்கு இணையான ஒரு தெளிவான மூலப் பதிப்பு பின்னர் வெளிவரவில்லை.

7. சைவ சித்தாந்த சமாஜ சித்தாந்த சாத்திர உரை- இரண்டாம் பதிப்பு

இது 1940 இல் வெளிவந்தது. இதனுள் உந்தி களிறு இருபா மூன்றுக்கும வேறு பழைய உரைகளும், சிவப்பிரகாசத்துக்கு மதுரைச் சிவப்பிரகாசர் பேருரையும் முன்னில்லாமல் இப்போது புதிதாக வெளிவந்தன. 1300 பக்கங்கள். விலையோ மூன்று. இப்பதிப்பு முதல் பக்கத்திலிருந்து கடைசிப்பக்கம் வரையில் முழுமையும் எம்முடைய பார்வை. இவற்றுக்காகச் செலவிட்ட முயற்சியும் உழைப்பும் சொல் லும தரத்தன அல்ல. சாது அச்சுக்கூடத்தில் அச்சாயிற்று. இது போலவெல்லாம் இனியொரு காலத்தில் நூல் வெளிவர முடியும் என்பது எதிர்பார்க்க இயலாதது.

பிற சாத்திரப் பதிப்புக்கள் அருமை. அவை ஏடுகளை வைத்துப் பரிசோதிக்கப் பெற்றன அல்ல. அவற்றுள் பாடங்களும் ஆதாரபூர்வ மானவையல்ல. அவற்றை இங்குக் கவனிக்காது விடுகிறோம்.

இனி சைவ சித்தாந்த சந்தானசாரியர், அவர்களுடைய அருள் நூல்கள், உரைகள், பதிப்புக்கள் ஆகியவற்றை தனித்தனியே எடுத்து ஆராய்வோம்.

# மெய் விரும்பிய அன்பர்

கா ம. வேங்கடராமையா

''வையம் நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே''

என்ற பாடல் பெரியபுராணப் பதிப்புக்களின் இறுதியில் அச்சிடப் பெற்றிருப்பதைக் காணலாம். இது பெரியபுராண ஓலைச் சுவடிகள் சிலவற்றில் இருந்த பாடலாகும்.

இப்பாடல் மதுரை மாவட்டம் பெரியகுளம் என்னும் ஊரில் இராசேந்திர சோழீச்சரம் என்ற திருக்கோயிலில் – கருவறையின் மேற்குப் புறச் சுவரில் ஒருகல்வெட்டின் தொடக்கத்தில் கொடுக்கப் பெற்றுள்ளது. அக்கல்வெட்டின் தருமச்செய்தி அறிந்துகொள்ள முடியவில்லை. [தென்னிந்திய சாசனங்கள் தொகுதி XX எண் 410; A R 1907 ஆம் ஆண்டில் 410] மேலும் திருச்செங்கோட்டில் உள்ள அரையநாட்டுப் பட்டயம், நல்லதம்பிப் பட்டயம், காங்கேயன் பட்டயம், சீரங்கராயன் பட்டயம் ஆகியவற்றின் தொடக்கத்திலும் இப்பாடல் காணப்பெறுகிறது என்பர்.

பட்டயங்களின் தொடக்கத்தில் இப்பாடல் இருக்கும் விபரம் புலவர் திரு. இராசு அவர்கள் கூறியதாகும்.

இச்செய்தி மெய்விரும்பிய சைவ அன்பர்கட்கு மகிழ்ச்சி தருவது.



## சைவ வேளாளர் சங்கம்
### திருநள்ளாறு கிளை

30—5—83 ஞாயிறு மாலை 4மணிக்கு சைவ வேளாளர் சங்கத்தின் கிளை பாண்டிச்சேரி மாநிலத்தின் திருநள்ளாற்றில் வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் (திருநள்ளாறு தேவஸ்தானம்) அவர்களின் சீரிய தலைமையின் கீழ்த் தொடங்கியது.

திரு N. காங்கேயன் பிள்ளை மற்றும் பல கிளைகளின் பிரதிநிதிகள் வாழ்த்துரை வழங்கினர். பொறுப்பாளர்களைத் திரு S. திருநாவுக்கரசு M.A (மத்திய சங்கச் செயலர்) தேர்ந்தெடுத்துப் பாராட்டினார்,

## ஸ்ரீ ஏகாம்பரநாதர் பதிற்றுப்பத்தந்தாதி

ஆமை போலவைம் புலன்களை அடக்கியே யானென செனல்மாற்றித்
தீமை யாம்வினை யனைத்தையுந் தொலைத்துநீ சிவபெனத் தெளியேன்
வாமை யேமுதற் சத்திகள் வழுத்துறுங் கச்சிமா வடிமேவும் [யான்
சேம வைப்பனே செய்வகை யிஃதெனத் தேறுமா தேற்றுயே. 29

தேற்று வாரிலைத் துன்பத்தி லடியனேன் திளைத்தனன் திளையாமல்
ஆற்று வாரிலை யாரெனைப் பயந்தவர் அப்பன்அம் மையுநீயே
போற்று வாருனைப் போற்றவுஞ் சவலையாய்ப் போகுத லழகேயோ
ஆற்று வேணியாய் அம்பலத் தாடுவாய் அருட்கச்சிப் பெருமானே. 30

(வேறு)

மானென நோக்கியர் மாமயல் கொண்டு
மீனென வேவலை வீழ்ந்திட லாமோ
வானவ கச்சியில் வல்விட முண்ட
பானல்செய் கண்ட பழமறை யோனே. 31

மறைத்தது மாய மலப்பட லங்கள்
இறைப்பொழு தேனும் எனைப்பிரி யாதே
சறைக்களக் கச்சிக் கண்ணுத லேநீ
குறைத்திட வல்லை கொடும்பகை தானே. 32

பகையிவ ருறவிவர் எனவுரை பண்பின்
வகையறி யாமை மதிக்குறை யன்றே
புகையனல் வேள்விசெய் பூசுரர் நாளும்
தகைபெறு கச்சித் தனிமுதல் செயலே. 33

செயலுன தலதென செயல்சிறி துண்டோ
வயல்நிறை கச்சியின் மாநிழல் வாழ்வாய்
மயலென தலதுன மயல்சிறி துண்டோ
கயல்பொரு கண்ணியர் கங்கண வானே. 34

கங்கண னேரணி கச்சியில் மேவும்
அங்கணன் என்றனை ஆண்டருள் தூயன்
தங்க ணடைந்தவர் தாழ்வினை நீக்கும்
செங்கன லேந்திய தேவர்கள் தேவே. 35

தேவர்க டேவனற் றிருமறை பாடும்
மூவர்கள் நாயகன் மூவுரு வானோன்
காவலர் போற்றிசெய் கச்சியில் மேவுஞ்
சேவக னைந்தொழில் செய்யநின் றானே. 36

நின்றனன் நான்மறை மாநிழல் மேவி
வென்றனன் முப்புரம் வெண்பொடி யாகக்
கொன்றனன் வெண்டலை கொடுபலி ஏற்கச்
சென்றன னென்மனத் தேயிருந் தானே. 37

இருந்தவ ராகவெ ழிற்சிலை முன்னம்
வருந்த வளைத்தவர் மன்னிய கச்சிப்
பொருந்துறு கம்பரைப் போற்றுதல் செய்யார்
பெருந்தவ மின்றிப் பிழைத்தவர் தாமே. 38

தாமரை யானுந் தடங்கட லானு
மாமத மீறிம தித்திடு போதில்
ஓமென நின்றும் ஓர்மலை யானன்
நாமெனுங் கச்சி நகர்ப்பெரும் பயனே. 39

பெரும்பய னின்றிப் பிழைபுரி நெஞ்சே
வரும்பய னியாதும் மனத்தினி லோராய்
கரும்புய லார்திருக் கச்சியின் மேவும்
பொரும்புய வானனைப் போற்றுதல் நன்றே. 40

நன்று நாடொறும் நாடும் அறிஞர்பாற்
சென்றி லேனினிச் செய்வதுந் தேர்கிலேன்
மன்று ளேகச்சி மாநகர் வாணனே
என்று வந்தெனக் கின்னருள் ஈவதே. 41

ஈவ தொன்றிலே னேற்றவர் தங்களுக்(கு)
ஆவ தொன்றிலன் நின்னடி யார்கள்பாற்

போவ தொன்றிலன் பூம்பொழிற் கச்சிப்பாய்
சாவ தொன்றுமுன் தாட்புணை நல்கவே. 42

நல்ல வன்னமக் கும்ஒளிர் பொன்மலை
வில்ல வன்விரைப் பூம்பொழிற் கச்சியிற்
பல்ல வன்தொழு பங்கயத் தாளினால்
வல்ல வன்கொடுங் காலனை மாய்க்கவே. 43

மாய வாழ்க்கையில் மாய்ந்தி ளைத்துயிர்
போய வாழ்க்கைய ராய்ப்பொடி யாகுமுன்
தாய னைவருட் கச்சியுள் தானுவாய்
மேயி னைருள் மேவுறல் மேன்மையே. 44

மேன்மை யாளர் விரும்புறும் வேந்தனை
நீன்மை யார்களத் தானை நிமலனை
வான்மை யார்பொழிற் கச்சியுள் வள்ளலைப்
பான்மை யாற்றொழல் பண்பினும் பண்பரோ. 45

பண்ணைப் பாகைப் பழத்தை யமுதினைக்
கண்ணைக் கண்மணி யைக்கன மால்வரைப்
பெண்ணைப் பாகம் பொருந்திய பித்தனை
எண்ணைக் கச்சி யெழுத்தினை யேத்தவே, 46

ஏத்து வாருளத் தின்னருட் சோதியைக்
கூத்து மாடுங் குழகனைப் பொன்மலர்
பூத்த வேணிப் புயங்கனைக் கச்சியிற்
காத்த நாயக னைக்கணித் துய்யுமே. 47

உய்யு மாறுண ராமல் உழன்றுநீ
செய்யு மாறு சிறிதேனுஞ் சிந்தியாய்
ஐயன் ஒண்பொழிற் கச்சியு ளண்ணலைப்
பைய வுள்கிற் பரஞ்சுடர் பாதமே. 48

பாத கம்புரி பாவிய ராயினுந்
தோத கம்புரி தூர்த்தர்க ளாயினும்
மேத கம்புரி கச்சியில் மேவிடிற்
சூத கம்புரி யாதருட் சோதியே. 49

சோதி யானவன் தொண்டரைச் சோதியான்
பாதி பெண்ணுரு வாய பராபரன்
வீதி யார்திருக் கச்சியில் மேவிய
நீதி யானை நினைக்குமென் நெஞ்சமே. 50

(வேறு)

நெஞ்சி னார நினைப்ப வர்க்கருள் நீத னைப்பர போதனை
வஞ்சி யாதருள் வஞ்சி பாகனை வண்த மிழ்க்கருள் தியாகனை
மஞ்சி னார்பொழிற் கச்சி மாநிழல் வாண னைப்பிரிந் தின்னலால்
அஞ்சி னார்க்கர னய சோதியை அடையு மாறினி யறிமினே. 51

அறியு மாறுபல் வேத மோதினு மரிய நூல்பல கேட்பினும்
பொறிசெய் வெந்துயர் போக்கி னும்புவி யாளு மன்னவ ராயினும்
வெளிசெ யும்பொழிற் கச்சி மாநிழல் விமல னாருள் பெறுகிலார்
தறிசெ யுங்கட களிறு வன்குழி சாய்தல் போல்வலி சாய்வரே. 52

சாய்வில் வன்பல நோய்ம ருந்தருள் தந்தை தாய்தம ராகியே
மாய்வில் இன்னருள் மாரி போலருள் வள்ள லைமண வாளனைத்
தோயு மன்பருட் சோதி யைத்துரு வாது ழன்றிடு நெஞ்சமே.
தீயு மொண்பொழிற் கச்சி மாநிழல் நீல கண்டனை நினையவே. 53

நினைநி னைந்திடு நெஞ்ச மும்நினை யேவ ழுத்துறு நீர்மையும்
வினைம லிந்திடு பிறவி கொண்டலை வேலை யுட் படு நாயினேன்
தினையி னுந்துணை யாயி னும்பெறத் தேவ தேவர்கள் சென்னியிற்
புனைம லர்க்கழற் கச்சி மாநிழற் புனித என்றருள் புரிவனே. 54

புரிம லர்க்குழல் நங்கை பங்கமர் புண்ணி யத்திரு வேடனார்
அரிம லர்ப்பொழில் கச்சி மாநிழல் ஆதி யார்ப்பரஞ் சோதியார்
தெரிய லார்க்கிடி யேற னாரவர் திருவ டிக்கெழில் நெஞ்சமே
எரிய ழற்படு மிழுதெ னாவினி துருக எவ்வினை எதிருமே. 55

எதிரி ருந்துளம் உருக ஏத்திலம் எண்ணு கின்றிலம் யாவருந்
துதிசெ யுந்திருக் கச்சி மாநிழற் சோதி யார்கழல், நீதியால்
விசிசெ யும்பொதி கொண்டு டுத்துழல் வினையி னாலெது செய்துநாற்
கதிசெ யுந்துயர் நீத்தருந்தவர் காணு மொண்கதி காணவே. 56

*************************

# மாணிக்கத் தீங்கனி

*************************

புலவர் **முருகு. சுவாமிநாதன்,** எம், ஏ.,

இன்பம் என்பது என்ன? என வினவினுல் வீடும் தோட்டமும் உடையராய் வாழ்தலே என்பர் சிலர்; சிலர் உறங்குதலே என்பர். ஒரு வேலையும் செய்யாமல் சோம்பிக்கிடப்பதே என மொழிவர் இன்னுமொருசாரார்; உண்ணுதற்கேற்ற உணவு வகைகளைத் தயாரித்து உண்பதே இன்பம் என்பர் பிறிதொரு வகையினர்; உண்பதிலும், வகை வகையாகத் தயாரித்து நேரத்திற்கேற்ற பொருள்களைத் தக்க பொருள்களோடு (Combination) கலந்து உண்பதும் மகிழ்ச்சி தருவதே; இனிப்புடைய பொருள்களை உண்பதில் சிலரும், மிகவும் காரமான பண்டங்களை உண்பதில் சிலரும் இன்பமடைவர்; இவற்றை எண்ணியே Taste Differs எனும் முதுமொழியும் உண்டாயிற்று; உண்ணுவதில் விருப்பம் மிக்கவர் தம்முளளும் வகைகள் பலவுண்டு; உண்ணும் பொருள்களில் வேட்கை கொண்டு விதவிதமான உணவுகளைச் செய்யச் சொல்லி அவற்றை உண்டு தூர்க்க முடியாத வயிறுகிய குழியை நாம் தூர்க்கின்றோம். என்பார் பட்டினத்துப்பிள்ளை.

''உண்டிப் பொருட்டாற்
கண்டன வெஃகி
அவியடு நர்க்குச் சுவைபகர்ந்
தேவி

ஆரா உண்டி அயின்றன ராகித்
தூராக் குழியைத் தூர்த்து''

எனவே உண்ணும் பொருள்களிலும் அவற்றின் வகைகளிலும், அவற்றைத் தயாரிக்கும் முறையிலும் வேறுபாடுகள் இருப்பினும் உண்ணுதலில் அனைவரும் உவப்படைவர் என்பதில் கருத்து வேற்றுமை இருக்கமுடியாது;

உணவு வகைகள் மட்டுமின்றி தாவரங்களிலிருந்து கிடைக்கின்ற பொருள்களாகிய காய், கனி முதலியவற்றையும் நாம் உண்கின்றோம்; தாவரங்கள் விளைந்து பூத்து, காய்த்துக் கனிந்து பழமாகின்றன: நாம் அவற்றின் காயினையும், கனியினையும் பறித்து உண்கின்றோம்; மா, பலா, வாழை எனும் மூன்றும் கனிவர்க்கத்துள் தலைமையுடைமை விளங்க 'முக்கனிகள்' என வழங்கப் பெறும்.

(வளரும்)

சிவ சிவ

# தில்லையில் ஆடிச் சுவாதியில்

# இன்னிசைத் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

## முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்

## சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

துந்துபி ஆண்டு ஆடித்திங்கள் 12 ஆம் நாள் 28—7—82 புதன் கிழமை ஆடிச் சுவாதியன்று

## சிதம்பரத்தில் திருமுறை விழா

திருமுறைவாணர்கள்:--

1. சுரலய இசைவள்ளல் திரு. எம். கனக சபை பிள்ளை
ஸ்ரீ காசிமடம் சிவ சிவ ஒலி மண்டப ஓதுவார், சிதம்பரம்.
2. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
திரு. டி. எம். விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள்,
திருவாவடுதுறை.
3. தேவார இசைமணி திரு. எஸ். முத்துக்கந்தசாமி தேசிகர்,
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சி.
4. திரு. ப. ராமச்சந்திரன், விருத்தாசலம்.
5. இன்னிசைமாமணி சங்கீர்த்தனரத்ன தேவார இசைமணி
திரு. எஸ். திருஞானசம்பந்தம்
தருமையாதீன கட்டளை ஓதுவார், சீர்காழி.
6. திரு. க. சொக்கலிங்க ஓதுவார்
தருமையாதீன கட்டளை ஓதுவார், வைத்தீஸ்வரன்கோவில்.
7. திரு. எஸ். எல். சாமி, பிடில், திருச்சி.
8. திரு. எஸ். ஏ. கோபாலன் – வேய்ங்குழல், சென்னை.
9. திரு. கோ. வெங்கட்ராமன் - மிருதங்கம், திருப்பனந்தாள்

அருளாணையின் வண்ணம்
ஆர். சுப்பிரமணிய பிள்ளை
ஏஜண்டு, ஸ்ரீ காசிமடம், சிதம்பரம்.

---

குறிப்பு: சிதம்பரம் ஸ்ரீமந் நடராஜப் பெருமான் சந்நிதியில் இரவு 8-மணிக்குத் தொடங்கித் திருமுறைவாணர்கள் சிவமே நிலவிய திருவீதிகளில் இரவு முழுவதும் திருமுறை ஓதிக் காலை 6-மணிக்கு ஸ்ரீமந் நடராஜப் பெருமான் சந்நிதியில் நிறைவு செய்வார்கள்.

# திருக்கணித பஞ்சாங்கம்

## தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

துந்துபி ஞு ஆடிமீ (1982 ஜூலை — ஆகஸ்டு)

திதி, நட்சத்திர காலம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ | ஆங்கிலவ | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (17—7—82) | சனி | ஏகாதசி 14-10 | கார்த்திகை 9-31 |
| 2 | (18—7—82) | ஞாயிறு | துவாதசி 11-02 | ரோகிணி 7-16 அடுத்து மிருகசிரிஷம் 28-42 |
| 3 | (19—7—82) | திங்கள் | திரயோதசி 7-37 பின், சதுர்த்தசி 28-02 | திருஆதிரை 25-58 |
| 4 | (20—7—82) | செவ்வாய் | ●அமாவாசை 24-27 | புனர்பூசம் 23-12 |
| 5 | (21—7—82) | புதன் | பிரதமை 21-01 | பூசம் 20-35 |
| 6 | (22—7—82) | வியாழன் | துதியை 17-53 | ஆயில்யம் 18-17 |
| 7 | (23—7—82) | வெள்ளி | திரிதியை 15-13 | மகம் 16-26 |
| 8 | (24—7—82) | சனி | சதுர்த்தி 13-09 | பூரம் 15-12 ஆடிப்பூரம் |
| 9 | (25—7—82) | ஞாயிறு | பஞ்சமி 11-47 | உத்திரம் 14-41 |
| 10 | (26—7—82) | திங்கள் | சஷ்டி 11-13 | அஸ்தம் 14-56 |
| 11 | (27—7—82) | செவ்வாய் | சப்தமி 11-27 | சித்திரை 15-59 |
| 12 | (28—7—82) | புதன் | அஷ்டமி 12-27 | சுவாதி 17-47 சுந்தரர் நாள் |
| 13 | (29—7—82) | வியாழன் | நவமி 14-07 | விசாகம் 20-10 |
| 14 | (30—7—82) | வெள்ளி | தசமி 16-17 | அனுஷம் 23-00 |
| 15 | (31—7—82) | சனி | ஏகாதசி 18-45 | கேட்டை 26-05 |
| 16 | (1—8—82) | ஞாயிறு | துவாதசி 21-20 | மூலம் 29-13 |
| 17 | (2—8—82) | திங்கள் | திரயோதசி 23-50 | பூராடம் நாள் முழுவதும் |
| 18 | (3—8—82) | செவ்வாய் | சதுர்த்தசி 26-07 | ,, 8-14 -18-ம் பெருக்கு |
| 19 | (4—8—82) | புதன் | ○பௌர்ணமி 28-04 | உத்திராடம் 11-00 |
| 20 | (5—8—82) | வியாழன் | பிரதமை நாள்முழுவதும் | திருஓணம் 13-25 |
| 21 | (6—8—82) | வெள்ளி | பிரதமை 5-37 | அவிட்டம் 15-25 |
| 22 | (7—8—82) | சனி | துதியை 6-44 | சதயம் 17-00 |
| 23 | (8—8—82) | ஞாயிறு | திரிதியை 7-23 | பூரட்டாதி 18-09 |
| 24 | (9—8—82) | திங்கள் | சதுர்த்தி 7-35 | உத்திரட்டாதி 18-50 |
| 25 | (10—8—82) | செவ்வாய் | பஞ்சமி 7-19 | ரேவதி 19-03 |
| 26 | (11—8—82) | புதன் | சஷ்டி 6-36 பின் சப்தமி 29-24 | அசுவனி 18-49 |
| 27 | (12—8—82) | வியாழன் | அஷ்டமி 27-46 | பரணி 18-08 |
| 28 | (13—8—82) | வெள்ளி | நவமி 25-42 | கார்த்திகை 17-01 |
| 29 | (14—8—82) | சனி | தசமி 23-16 | ரோகிணி 15-30 |
| 30 | (15—8—82) | ஞாயிறு | ஏகாதசி 20-30 | மிருகசிரிஷம் 13-38 |
| 31 | (16—8—82) | திங்கள் | துவாதசி 17-30 | திருஆதிரை 11-30 |

சிம்மத்திற்கு சூரியன் 25-29

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

கன்மம்

28. நண்ணியிடும் உருவதனுக்கு ஏது ஆகி
நானுபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரும் ஆதலால் அனுதி ஆகிப்
பலவாகி அணுக்கள்தொறும் படர்வது ஆகி
எண்ணிவரும் மனவாச கன்மத்தால் இயற்றும்
இயல்பினதாய் மதிகதமாய் இருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலே மாயை மேவிப்
பொருந்தும்இது கன்மமலம் புகலும் ஆறே:

(தெ-ரை) உயிர்கள் தாம் பெறுதற்குரிய உடல்களுக்குக் காரண மாய், அவ்வுடம்புகொண்டு துய்க்கப்பெறும் பல்வேறு நுகர்ச்சிகளைத் தருவதாய். அழிந்தும் தோன்றியும் வருதலால் இடையறாது ஓடும் நீர்ப்பெருக்குப் போல தொடர்ந்து நிற்கும் தொடர்ச்சியுடைய தாய், பல்வேறு வகையினவாய், உயிர்கள்தொறும் செறிந்திருப்ப தாய், நினைத்தற்குரிய மனத்தினாலும் சொல்லாலும் உடலாலும் செய்யப்படும் இயல்புடையதாய், புத்திதத்துவத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு இன்பமும் துன்பமுமாய இருபயன்களையும் தரும் புண்ணிய பாவ வடிவாய், பேரழிவுக் காலத்து மாயையைச் சென்று பொருந்துவது கன்ம மலமாம். இதுவே அறிஞர்கள் கூறும் விளக்கமாம்.

'வினைப் போகமே ஒரு தேகங் கண்டாய்' என்றலின் உயிர்கள் தம் வினைக்கீடாக உடல் பெறுதலை அறியலாம். இக்கன்மம் பழவினை (சஞ்சிதம்) எனப்படும். உயிர்கள் தாம் செய்த வினைக்கு ஈடாகப் பல்வகையான இன்ப துன்பங்களையும் துய்த்தலின் 'நானுபோகங்கள்' என்றார். போகங்கள்-இன்பதுன்பங்கள். இக்கன்மம்ஏன்றவினை(பிராரத் துவம்) எனப்படும். வினைவயத்தால் ஒரு பிறவி எடுத்து அதற்குரிய இன்ப துன்பங்களைத் துய்க்கும் பொழுதே பிறருக்கு நலந்தீங்குகளைச் செய்யநேரிடுகிறது. அதனால் வருவினை (ஆகாமியம்) வந்து ஏறுகிறது. இவ்வாறுமுன்செய்த வினை அழியவும், அழியும் பொழுதேபின்னர்வினை

ஏறவும் இடையறாது ஓடும் நீர்ப்பெருக்குப் போல அவ்வினைப்பெருக்கும் தொடருவதால் 'அனாதி' என்றார். கன்மம் நல்வினை தீவினை எனஇரு திறப்படினும் அவற்றுள் ஒவ்வொன்றும் பல்வேறு வகைப்பட அமைந்து நிற்றலின் 'பலவாகி' என்றார். கன்மம் என்பது மனமொழி மெய்களால் ஏற்படுவது. அவ்வாறு ஏற்படும் நிலையில் அது வருவினை எனப் பெயர்பெறும். கன்மம் பக்குவமாகும் அளவும் நுண்ணிதாய்ப் புத்தி தத்துவம் பற்றுக் கோடாக மாயையில் ஒடுங்கி நிற்கும். அந் நிலையில் அது பழவினை என்றும், புண்ணிய பாவம் என்றும் பெயர் பெறும். அதன் பயனாகிய இன்ப துன்பங்களைத் தரும்பொழுது அது நுகாவினை எனப் பெயர்பெறும். முற்பிறவிகளிலே செய்யப்பட்ட வினைப்பயன்களோடு இம்மையில்உளவாகிய கன்மங்களையும்சேர்த்துத் துய்ப்பதும் உண்டு. இம்மையில் செய்த கொலை களவு முதலியன காரணமாக இம்மையிலேயே அவற்றின்பயனைத் துய்த்தலும் உண்டு. இம்மையில் செய்த வினையின் பயனை மறுமையில் துய்த்தலும் உண்டு. சென்ற பிறவி என்ற முறையின்றி எந்தப் பிறவியிலோ எப்பொழுதோ செய்த வினையின்பயனை யாதானும் ஒரு பிறவியில் துய்த்தலும் உண்டு இவை அவ்வவ் வினைகளின் வன்மை மென்மைகளுக்கு ஏற்பவும், இறைவனின் ஆணையின் வண்ணமும் நிகழ்வனவாம். 'இம்மைச் செய்தது மறுமைக்காம் எனும் அறவிலை வணிகன் ஆய் அலன்' 'வினையின் வந்தது வினைக்கு விளைவாயது.' 'இம்மைச் செய்து மறுமைப்பணித்தால் வாழ்ந்து போதிரே',

குற்றொருவரைக் கூறை கொண்டு
கொலைகள்சூழ்ந்த களவெலாம்
செற்றொருவரைச் செய்த தீமைகள்
இம்மையே வரும் திண்ணமே'

என்பனவாதிய கூற்றுக்களால் இத்தகைய வினை நிலை அறியப்படும்:

பழவினையும் நுகர்வினையும்

29: கன்மநெறி திரிவிதம்நல் சாதி ஆயு போகம்
கடனதுஎன வரும்; மூன்றும் உயிர்ஒன்றில் கலத்தல்
தொன்மையது; ஊழ் அல்லதுஉணவு ஆகா; தானும்
தொடங்கு அடைவின் அடையாதே தோன்றும் மாறித்
தன்மைதரு தெய்விகம்முன் பவுதிகம் ஆன்மிகமாம்
தகையிலுறும் அசேதன சேதனத்தாலும் சாரும்:
நன்மையொடு தீமைதரு சேதனனுக்கு இவண் ஊண்
நாடில்அதன் ஊழ்வினையா நணுகுந் தானே.

(தெ-ரை) வினை பயன்தரும் வழிகள் மூன்றும்: அவை குலப் பிறப்பு, வாழ்நாள், நுகர்ச்சிமுறை என்பனவாம். இம்மூன்றும் ஓர் உயிர்க்கண் கூடுவது அதன் பழவினையினுல் ஆம். ஊழல்லது உயிர்க்கு நுகர்பொருள் யாதும் இல்லை. அவ்வினைப்பயனும் உயிர் செய்த முறையிலன்றி மாறியும் வரும். தாம்தாம் செய்த நன்மை தீமைக்கு ஏற்ப வரும் வினைப் பயன்கள் தெய்வத்தானுதல் பிறவற்ருனுதல், தன்னுனுதல் வரும். இம் மூவகையான் வருவனவும் அறிவுடைப் பொருள்களானும் அறிவில் பொருள்களானும் வரும். நன்மை தீமைகளை ஈட்டிவரும் உயிர்க்கு இப்பிறவியில் நுகர்வு கிடைத்தல் அது முற்பிறவியில் செய்த வினையினுலாம்.

திரிவிதம்-மூவகை. நற்சாதி-உயர்குடிப்பிறப்பு. நல்லூழாலல்லது உயர்குடிப் பிறப்பு வாயாது என்பது கருத்து. உயர்குடிப் பிறப்பு என்பது வெறும் பிறப்பினுல் மட்டும் வாய்வதாகாது. அதற்கேற்ற ஒழுக்கமுடைமையாலேயே சிறப்புப் பெறுவதாகும். 'ஒழுக்கம் உடைமை குடிமை, இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்' எனத் திருவள்ளுவனுர் கூறுமாற்ருனும் இவ்வுண்மை உணரலாம். 'தவம் செய் சாதியினில் வந்து பரசமயங்கள் செல்லா பாக்கியம் பண்ணுதே,' (சித்தியார் 2:90) 'தவஞ்செய்த நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக் கற்ருர்சூழ் சொல்லுமாம் கண்டு' (சிவ ஞான போதம் 8: வெண்பா) என வருவன காண்க. இவ்வாறு உயர் குடிப் பிறப்பன்றி வரும் இழிகுலப் பிறப்பு படைகொண்டார் நெஞ்சம் போல நன்றாக்காமை பற்றி இவ்வாறு கூறினுர். இவற்றிற்கு மறுதலையாகக் காணும் காட்சியும் உளவேனும் மிகுதிபற்றி இவ்வாறு கூறினுர். 'பெற்றியால் தவம்முன் செய்தானுயினும் பிறப்பின் சார்பால், குற்றமே குணமா வாழ்வான் கொடுமையே தலை நின்றுள்ளான்' எனச் சேக்கிழார் பெருமான் அருளியிருப்பதும் நினைவுகூரத் தக்கவாம். ஆயு- வாழ்நாள். போகக்கடன்- இன்ப துன்பங்களைத் துய்க்கும் முறை. தொன்மையது- பழவினைப் பயத்தது. உணவாகாது- நுகரிச்சிக்கு ஏதுவாகாது. ஒருவன் நுகரும் இன்ப துன்பத்திற்குக் காரணம் அவன் செய்த ஊழன்றி வேறு காரணம் இல்லை என்பதாம். 'நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார் நோயின்மை வேண்டுபவர்' எனத் திருவள்ளுவனுர் கூறுதலும் காண்க. தானும்- அவ்வினைப்பயன்தானும். தொடங்கு அடைவின் அடையாதே- செய்யப்பட்ட அந்நிரல் முறையில் அடையாது. எனவே ஒருவன் செய்த நன்மை தீமைகள் அவன் செய்த முறையிலன்றி முன் செய்தது பின்னுமாய்ப் பின் செய்தது

முன்னுமாய் வருதலும் கூடும் என்பது கருத்து. கீரை வாழை தென்னை முதலியன ஒரே காலத்தில் பயிரிடப்படினும் பயன் தருதல் ஒரே காலத்ததாய் அமையாது. அதைப்போன்றே இம்மைச் செய்தன மறுமைக்காதலும் உண்டு. இம்மைச் செய்தன இம்மைக்காதலும் உண்டு. இம்மைச் செய்தன பல பிறவிகள் கடந்து பயன் தருதலும் உண்டு. மாறித் தோன்றும் எனக் கூட்டுக. வினை பயன் தருவது தெய்வத்தாலும் ஆம். உருத்தெரியாக் காலத்தே தாய் வயிற்றி லிருந்து அழுவதும், பிறப்பு இறப்புக்களால் வருந்துவதும், சுரர் நரர்களாய் வருந்துவதும் தெய்வம் தர வருவதாம். தெய்விகம் முன்-தெய்விகம் முதலாக. பவுதிகம்- நிலம் நீர் முதலிய ஐவகைப் பூதங் களான் வருவதாம். மிகுகுளிர், மிகுவெப்பம், பெருமழை, பேர்இடி முதலியவற்றான் வரும் துன்பம் இவ்வகையில் அடங்கும். ஆன்மிகம்-உயிர்களால் வருவதாம். இது உடல் தொடர்பாயும் வரும். மனத் தொடர்பாயும் வரும். விலங்கு நோய் கள்வர் முதலியவற்றான் வருவது முன்னைய வகையில் அடங்கும். அழுக்காறு அவா வெகுளி முதலியன பின்னைய வகையில் அடங்கும். அசேதனம்- அறிவற்றது.

### வருவினை

30. மேலைக்கு வருவினை எது என்னில் அங்கண்
விருப்புவெறுப் பெனஅறி; அவ் விளைவும் எல்லாம்
மூலத்த வினைப்பயில்வாம் என்னின், நாம்என்
முற்றியதன் பயன்உனக்கு முளைக்கும் என்பர்;
ஞாலத்து வினைகள்இரு திறனாகும்: புந்தி
நண்ணுதவினை நணுகும் வினையென ஒன்றிரண்டாய்
ஏலத்தான் இதம்அகிதமாம்; இதனால் வழுவாது
எய்தியிடும் புண்ணிய பாவங்கள் என்றே.

(தெ-ரை) மேல் வரும் பிறவிக்கு ஏதுவாக வரும் வருவினை விளைவது எங்ஙனம் எனில் முன்னைய வினைப்பயனை நுகருங் காலத்து அதில் வைத்த விருப்பு வெறுப்புக்களாலேயே யாம் என அறிவாயாக. அவ்வாறு கொள்ளும் விருப்பு வெறுப்புக்கள் எல்லாம் முன்னைய ஊழ்வினைப்பயனே என்னில், அன்று, அவ்வினைப் பயன்கள் ஊழின் வந்ததென உணராது நான் செய்கின்றேன் நான் துய்க்கின்றேன் இப்பொருள்களெல்லாம் என்னுடையவே என்னும் முனைப்பு முதிர்ந்து ஏற்பதால் அதன்வழி வருவினை வரும் என்பர் சான்றோர். தெரியாது

செய்யும் வினை, தெரிந்து செய்யும் வினை என இவ்வுலகில் செய்யப் படும் வினைகள் இருவகைப்படும். அவை ஒவ்வொன்றன் வழியும் நல்வினை தீவினை வரும். அவற்றின்வழி வரும் அறம் பாவங்கள் அவ்வுயிர்களைப் பொருந்தும்.

எனவே முன்னைய ஊழின்வழி வரும் நலந்தீங்குகளை நம்மால் முன் செய்த வினைக்கு ஈடாய்ச் சிவனருள் செய்விப்பது என்னும் உணர்வில் ஏற்று, நன்றுங்கால் நல்லவாக் காணாமலும் அன்றுங்கால் அல்லற்படுவதும் இன்றி அமைவுடன் ஏற்றுத் துய்ப்பின் மேல் வருவினைகள் வருவதில்லை என்பதும், அவ்வாறின்றித் தீதும் நன்றும் பிறர்தர வந்தனவே எனப் பிணக்குற்று அதனால் யான் எனதென்னும் செருக்குற்று வினைப்பயனை நுகரின் மேலும் வருவினை விளைந்து கொண்டே போகும் என்பதும் தெளிவாம். விருப்பு வெறுப்புக்கள் மனம் மொழிமெய் ஆகிய மூன்றானும் வருதல் பற்றி 'எல்லாம்' என்றார். மூலத்தவினை- பழவினை. நாம் என் முற்றி- யான் எனதென்னு செருக்கினால் முதிர்ந்து. புந்தி நண்ணாத வினை- மனத்தொடு பொருந்திச் செய்யாத வினை: தெரியாது செய்த வினை. நணுகும் வினை- மனத்தொடு பொருந்திச் செய்த வினை. எனவே மனத்தொடு பொருந்திச் செய்யினும் பொருந்தாமல் செய்யினும் அவற்றிற்கு உரிய விளைவுகளைத் துய்த்தே தீர்த்தல் வேண்டும் என்பது ஒருதலையாம். 'எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம், மாணா செய்யாமை தலை' என்னும் திருக்குறள் உரையில், ஈண்டு மனத்தான் ஆகாதவழிப் பாவமில்லை என்பது பெற்றாம் எனப் பரிமேலழகர் கூறியதைப் பாண்டுவும் தசரதனும் பாவம் எய்தியது என்னை எனக் கடாவுக என நுண்பொருள்மாலை உரையாசிரியர் மறுத்திருப்பது ஈண்டு நினைவு கூர்தற்குரியதாம். ஏல- பொருந்த. இதம்- நன்மை: பிறஉயிர்கட்கு நன்மை செய்யின் அது நல்வினையாம். அகிதம்- தீமை: பிற உயிர்கட்குத் தீமை செய்யின் அது தீவினையாம். நல்வினையால் புண்ணியமும் தீவினையால் பாவமும் எய்தும்.

அறம் பாவங்கள் வரும் வழியும் பாவம் நீங்கும் வழியும்

31. உற்றதொழில் நினைவுஉரையின் இருவினையும் உளவாம்
 ஒன்றுஒன்றால் அழியாது; ஊண் ஒழியாது உன்னில்;
மற்றவற்றின் ஒருவினைக்கோர் வினையால் வீடு
 வைதிகசை வம்பகரும் மரபில் ஆற்றப்
பற்றியது கழியும்; இது விலையால் ஏற்கும்
 பான்மையுமாம்; பண்ணாது பலிக்கும் முன்னம்

சொல்தருநூல் வழியின்வரின் மிகுதி சோரும்
சோராது அங்குஅது மேலைத் தொடர்ச்சி யாமே.

(தெ-ரை) உடலால் பொருந்திய தொழிலாலும், மனத்தின் நினைவாலும், சொல்லின் பயனாலும் நல்வினையும் தீவினையும் வருவனவாம். நல்வினை தீவினையினாலும், தீவினை நல்வினையினாலும் நீங்குவதில்லை. நன்கு ஆராய்வுழி அவ் வினைகளின் பயனைத் துய்த்தாலன்றித் தொலைவதில்லை. எனினும் வேதாகம மரபினைக் கூறும் நூல்கள் முற்கூறிய இருவினைகளுள் நல்வினை செய்யத் தீவினை நீங்கும் என அதற்குரிய கழிவினை வகுத்துக் கூறும். அவ்வாறு செய்யும் தீமைக் கழிவினையும் தாமே செய்து கொள்வதன்றி உலகில் பொருள் கொடுத்துப் பிறரைக் கொண்டும் செய்து கொள்ளலாம் என்று கூறும். இவ்வாறன்றி முற்கூறிய வேத ஆகம நெறி வழி மனத்தொடு பொருந்தி நடப்பினும் அத்தீமையினின்றும் நீங்கலாம். அவ்வழியானும் நீக்கிக் கொள்ளாத வினைப்பயன் வரும் பிறவிகளில் தொடர்ந்து பயன் தரும் என்பதாம்.

உற்ற தொழில் - உடலால் பொருந்திய தொழில். உரை-சொல். ஊண் ஒழியாது - (அவ்வவ் வுயிர்களும் தாம் தாம் செய்த வினைப் பயனை) நுகர்வதினின்றும் தவிராது. எனவே வினைப்பயன் துய்த்ததன்றித் தொலையாது என்பது கருத்து. 'தீவினை செய்தார் கெடுதல் நிழல்தன்னை வீயாது அடியுறைந்தற்று' எனத் திருவள்ளுவனாரும், 'இட்ட வித்தின் எதிர்வந் தெய்தி, ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணாது' என இளங்கோவடிகளும் கூறுதல் காண்க. வீடு - விடுதல்; நீக்கிக் கொள்ளுதல். பற்றியது கழியும் - முன்பு பொருந்திய பாவங்கள் நீங்கும். விலையால் ஏற்கும் - (தீமைக்கழிவினைத் தாமே செய்து கொள்ள இயலாத பொழுது) பொருள் கொடுத்து அதன் வழிப் பிறரைக் கொண்டு பாவக் கழிவு செய்து கொள்ளுதலுமாம் 'ஒத்துடை அந்தணர் உரைநூற் கிடக்கையின், தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத், தானஞ் செய்தவள் தன்துயர் நீக்கிக், கானம் போன கணவனைக் கூட்டி, ஒல்காச் செல்வத்து உறுபொருள் கொடுத்து, நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ' என வரும் சிலம்பால் கோவலன் செய்த கருமக் கழிபலன் (பிராயச்சித்தம்) பார்ப்பனிக்கு எய்தியமை உணரலாம். இவ்வாறே நல்வினை செய்ய இயலாதோர்க்கு அதனைச் செய்யும் ஆற்றலுடையார் தாம் செய்து அதன் பயனை அவர்க்குக் கொடுக்கலாம். இதனைப் 'புண்ணியம் பண்ணி அட்டியும்' (பட்டினப்பாலை வரி. 203, 204) என நச்சினார்க்

கினியர் கொண்டு கூட்டி உரைத்திருக்கும் உரையான் அறியலாம். மிகுதி சோரும் - மிகுதியாக நிற்கும் பாவம் நீங்கும். எனவே முன் செய்த பாவத்தை நீக்குதற்கு இருவழிகள் உளவென இப்பாடலால் அறியலாம். ஒன்று கருமக் கழிவு (பிராயச் சித்தம்). இதனைத் தானேயோ அன்றிப் பொருள் கொடுத்துப் பிறராலேயோ செய்து கொள்ளலாம் என்பது. இரண்டு முன் செய்த தவறு போகப் பின் ஒரு ஞான்றும் தவறு செய்யாது அறவழி நிற்பது. அதாவது நன்னெறி நிற்கும் உரனுடைமையோடு இறைவனை நோக்கிப் புறவழிபாடு (சரியை) அகவழிபாடு (கிரியை), ஒன்றிய வழிபாடு (யோகம்) ஆகிய வற்றைச் செய்து வாழ்வதாம். ஈதொன்றே பற்றி நின்ற பாவங்கள் பற்றறுதற்குரிய வழியாம். 'எற்றென்று இரங்குவ செய்யற்க செய் வானேல் மற்று அன்ன செய்யாமை நன்று' எனத் திருவள்ளுவனாரும் கூறுவர். தன் மகன் செய்த தீங்கிற்கு அமைச்சர்கள் கருமக் கழிவு செய்யலாம் எனக்கூற,

'வழக்கென்று நீர்மொழிந்தால் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை இழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ
இழக்கின்றேன் மைந்தனைஎன்று எல்லீருஞ் சொல்லியஇச்
சழக்கின்று நான் இசைந்தால் தருமந்தான் கலியாதோ'
'என்மகன்செய் பாதகத்துக்கு இருந்தவங்கள் செய இசைந்தே
அன்னியன்ஓர் உயிர்கொன்றால் அவனைக் கொல்வேனானல்
தொன்மனுநூல் தொடைமனுவால் துடைப்புண்டது எனும்
வார்த்தை

மன்னுலகில் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்கென்றான்'
என மனுவேந்தன் மறுத்திருப்பதன் வாயிலாகக் கருமக் கழிவு பற்றி நம் அருளாளர்கள் கொண்ட திருவுள்ளம் அறியலாகும். உமாபதி சிவாசாரியரும் இதனைப் பிறர் கொள்கையாக அருளியிருப்பதும் ஈண்டு அறியத் தக்கதாம்.

ஐம்மலங்கள்

32. மோகம்மிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும்
மூல ஆணவம் ஒன்று, முயங்கி நின்று
பாகம்மிக உதவுதிரோ தாயி ஒன்று,
பகர்மாயை ஒன்று படர்கன்மம் ஒன்று,
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரும் மாமாயைத் திரட்சி ஒன்று என்று
ஆகமலம் ஐந்தென்பர்; ஐந்தும் மாறாது
அருள் என்பது அரிதென்பர் அறிந்து ளோரே;

(தெ-ரை) அறியாமை மிகுமாறு உயிர்கள் தோறும் இயைந்து நின்று அறிவை மறைத்து நிற்கும் மூலமலம் ஆகிய ஆணவ மலம் ஒன்று. அம்மலத்தைப் பொருந்தி நின்று அதன் வலிகெட உயிர்க்கு உதவி நிற்கும் மறைப்பாற்றல் ஒன்று. முற்கூறிய மாயை ஒன்று. உயிர்களைப் பற்றி நிற்கும் கன்மம் ஒன்று. உடல் கருவி உலகு நுகர் பொருள்களாக விளங்கி நிற்கும் மாயையின் கூட்டமாகிய மாயேயம் ஒன்று. இவ்வாறாக மலம் ஐந்தென்று கூறுவர், இவ்வைந்தும் உயிரி டத்து நீங்காது அருள் பெறுதல் அரிதென்பர் அறிவிடையோர்.

ஈண்டு அருமை இன்மை மேற்று. மோகம் - மயக்கம்: பொரு ளல்லவற்றைப் பொருளென்று உணரும் மயக்கம். திரோதாயி - மறைப்பாற்றல்: மலங்களைத் தொழிற்படுத்துவதன் மூலம் அவற்றின் வலி கெடச்செய்து உயிர்க்குப் பக்குவத்தை விளைவிக்கும் அருள். மலங் களைத் தொழிற படுத்தும் நிலையில் உயிர் ஒராற்றான் மயங்கி நிற்கும். அதுபற்றி இது மலமெனக் கூறப்படினும் இது உயிர்க்கு உதவுவதோர் அருளாற்றல் என்பது உணரத்தக்கது. 'பரிந்து நாகமா நதி மதியம் பொதிசடையான அடிகள் நணுகும் வகை கருணை மிக நயக்குந் தாயே' (2) என முன்னர் ஆசிரியர் அருளியிருப்பதும் ஈண்டு நினைவு கூரத்தக்கதாம் உயிரின் அறிவோடு கூடி அதனை மயக்கி நிற்பது மாயையாகும். அவ்வாறு மயங்குதற்கு முன்னிலைப் பொருளாக விளங்குவது மாயாகாரியமாகும்.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற் புராணம்

(உரை நடை)

## மூன்றாவது

## திருவாலவாய்க் காண்டம்

—o—

### 49. திருவாலவாயான படலம்

சோமசுந்தரக் கடவுள் துதி

பாயுடையார் விடுத்தபழி அழல்வழுதி
உடல்குளிப்பப் பதிகம் ஓதும்
சேயுடைஆ ரணந்திளைக்குஞ் செவியுடையார்
அளவிறந்த திசைகள் எட்டும்
தோயுடையார் பொன்னிதழித் தொடையுடையார்
விடவரவஞ் சுற்றும் ஆல
வாயுடையார் புகழ்பாடப் பெறுவேமேல்
வேண்டுவ(து)இம் மனித யாக்கை.

அங்கயற்கண் அம்மையார் துதி

வேதனெடு மாலாதி விண்ணுடோர்
மண்ணுடோர் விரத யோகர்
மாதவர்யா வருங்காண மணிமுறுவல்
சிறி(து)அரும்பி மாடக் கூடல்
நாதனிரு திருக்கரந்தொட்(டு) அம்மியின்மேல்
வைத்தகயல் நாட்டச் செல்வி
பாதமலர் எழுபிறவிக் கடல்நீந்தும்
புணையென்பர் பற்றி லாதோர்;

ஊழியின் முடிவு

மேருமலையினை வென்ற திரண்ட தோள்களையுடைய சுகுண பாண்டியனுக்குப்பின் சித்திரவிரதன், சித்திரபூடணன், சித்திரத் துவசன், சித்திரவருமன், சித்திரசேனன், சித்திரவிக்கிரமன், இராச

மார்த்தாண்டவன், இராசசூடாமணி, இராசசார்த்தூலன், துவிசராச குலோத்தமன், ஆயோதனப் பிரவீணன், இராசகுஞ்சரன், பரவிராச பயங்கரன், [1]உக்கிரசேனன், சத்துருஞ்சயன், வீமரதன், வீமபராக்கிரமன், பிரதாப மார்த்தாண்டன், விக்கிரம கஞ்சுகன், சமரகோலாகலன், அதுல விக்கிரமன், அதுல கீர்த்தி என்னும் இருபத்திரண்டு மைந்தர்கள் வழிவழியாகத் தோன்றி இந் நிலவுலகை அரசாண்டார்கள். அதுல கீர்த்தி என்னும் பாண்டியனுக்குப் பின் அவன் குமாரனாகிய கீர்த்திபூடண பாண்டியன் அரசுபுரியும் நாளிலே ஊழிக்காலம் (பிரளய காலம்) வந்தது. அப்பொழுது கருங்கடல் ஏழும் கரைகடந்து ஆர்த்துப் பொங்கி ஒருங்கெழுந்து வானமும், எட்டு யானைகளும் எட்டு மலைகளும் சக்கரவாளகிரியும் நிலைகுலையும்படி உலகத்தை அழித்தன.

### ஊழியிலும் அழியாதவை

அப் பெரிய கடல் வெள்ளத்திலே மூழ்கி அழிவில்லாத எப் பெரிய வுலகமும் அழிந்தது. ஏழு தீவுகளும் அழுந்தன. அவற்றிலே தங்கிய அசையும்பொருள்களும் அசையாப்பொருள்களும் அழிந்தன. நீண்ட கொடுமுடியினையுடைய மலைகளும் அழிந்தொழிந்தன. ஆனால் அங்கயற்கண் அம்மையின் திருக்கோயிலும், விண்ணிழி விமானமும், பொற்றாமரைத் தீர்த்தமும், இடபமலையும், யானை மலையும், நாக மலையும், பசு மலையும், பன்றி மலையும் அழியாதிருந்தன.

### உலகத் தோற்றம்

பிரளய நீர் வற்றியது. சிவபெருமான் முன்போலவே உலகத்தைப் படைத்துத் தேவர்களையும் மக்களையும் பறவைகளையும் விலங்குகளையும் படைத்துச் சந்திரன் சூரியன் அக்கினி என்னும் மூவருடைய குலத்தினின்றும் முன் போலவே தமிழ் வேந்தர் (சேர சோழ பாண்டியர்) மூவரையும் படைத்தருளினர்.

### வங்கியசேகர பாண்டியனின் ஆட்சிமுறை

பின்னர் சந்திரன் மரபாகிய பாற்கடலுள் அறுபத்துநான்கு கலைகளோடும் விளங்கித் தோன்றும் முழுமதிபோல வங்கிய சேகர பாண்டியன் என்னும் அரசன் தோன்றினன். அவன் சோமசுந்தரக்

---

1. இந்த உக்கிரசேனனுக்குப் பின் மகாசேனன் என்ற ஒருவனைக் கூட்டி இருபத்துமூன்று பாண்டியர் பரம்பரை என்று ஆலாசிய மான்மியம் கூறுகின்றது.

கடவுளின் திருக்கோயிலைச் சூழ அழகிய சிறுநகரம் ஒன்றை அமைத்து, அதில் இருந்துகொண்டு அரசு நடத்தி வந்தான். அவன் மனு வழியே செங்கோல் செலுத்தியமையால் கலி என்னும் பகைவன் புறங்காட்டி ஓடத் தன்னுடு எங்கும் பல வளங்களைச் சுரக்க, மக்கள் நாடோறும் பெருகினுர்கள். அங்ஙனம் பெருகிய மக்களெல்லாம் வசித்தற்கு இடம் போதாமையினுலே வங்கிய சேகர பாண்டியன் திருக்கோயிலை யடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கி நின்று, ''எம்பெருமானே! நின் அருள் வலியினுலே இந்நிலப் பொறையைச் சுமக்கின்றேன்; இப்போது அடியேனுக்கு நேர்ந்திட்ட ஒரு குறையைப் போக்குதல் வேண்டும்; இவ்வளவு குடி மக்களும் இருக்கத்தக்கதாக ஒரு நகரினை அமைக்கவேண்டும். இந் நகரத்துக்கு ஆதியிலே வரை யறுக்கப்பட்ட எல்லையைக் காண்கிலேன். ஆதலால் இன்றைக்கு அதனை யான் அறியுமாறு காட்டியருள்க'' என்று இரந்து வேண்டினுன்.

> இத்தனை மாக்களும் இருக்கத் தக்கதாப்
> பத்தனம் காணஇப் பதிக்கண் ஆதியே
> வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலேன்;
> அத்த!மற்(று) அதனையின்(று) அறியக்காட் டென்ருன்;

இறைவன் தம் திருக்கரத்துப் பாம்புக்குக் கட்டளையிடல்

அப்பொழுது நுண்ணிய பொருளினும் நுண்ணியவரான சோம சுந்தரக் கடவுள் விண்ணிழி விமானத்தினின்றும் எழுந்து, பாண்டியனது அன்பிற்கு எளிய சித்த மூர்த்தியாகி அறமும் அருளுமாய கடலாகி வருவாராயினுர். அச் சித்த மூர்த்திகள் பாம்பினுலே அரைஞாண், கோவணம், பூணூல், சன்னவீரம் (வெற்றி மாலை), குழை, குண்டலம், பாதகிங்கிணி, கங்கணம் என்பவற்றைத் தாங்கி மகாமண்டபத்தின் பக்கத்திலே வந்து நின்று, தமது திருக்கரத்திலே கங்கணமாகக் கட்டிய பாம்பைப் பார்த்து, ''நீ இப் பாண்டியனுக்கு இந்நகரத்தின் எல்லையை அளந்து காட்டுக'' என்று பணித்தருளினுர்; பாம்பு அவரை அடிவணங்கி, ''எம்பெருமானே! இந் நகரம் அடியேன் பெயரினுல் விளங்கும்படி அருள்புரிவாயாக'' என்று பிரார்த்தித்தது. கருணைக் கடலாகிய சிவபெருமான் ''அங்ஙனமே ஆகுக'' என்று அருளினுர்.

பாம்பும் மதுரை மாநகர எல்லையைக் காட்டுதல்

உடனே பாம்பு விரைந்து கிழக்குத் திக்கிலே சென்று வாலை நீட்டி, நகருக்கு வலமாக நிலத்திற் படிந்து உடலை வளைத்து வாலைத்

தனது வாயில் வைத்துப் பாண்டியனுக்கு எல்லையைக் காட்டிவிட்டுத் திரும்பிப் போய்ச் சித்தமூர்த்திகளின் திருக்கரத்தின்கண் கங்கண மாயிற்று. சித்தமூர்த்திகளும் தமது திருக்கோயிலின்கண் எழுந்தருளினார்.[1]

கிட்டி சைத்தலைச் சென்றுதன் கேழ்கிளர் வாலை
நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந்(து)உடலைக்
கோட்டி வாலைவாய் வைத்துவேற் சொற்றவற்(கு)எல்லை
காட்டி மீண்(டு)அரன் கங்கண மானது கரத்தில்.

பாண்டியன் மதுரை மாநகருக்கு எல்லை காட்டுதல்

பின்பு வங்கிய சேகர பாண்டியன், பாம்பு வளைந்து எல்லை கோலியபடியே சுவர் எடுத்துச் சக்கரவாளகிரி எனமதில் கட்டுவித்துத் தெற்கு வாயிலுக்குத் திருப்பரங்குன்றமும், வடக்கு வாயிலுக்கு இடப மலையும், மேற்கு வாயிலுக்குத் திருவேடகமும், கிழக்கு வாயிலுக்குத்திருப்பூவணமும் எஞ்ஞான்றும் எல்லையாக அமைத்தான்.

தென்றி சைப்பரங் குன்றமும் வடதிசை இடபக்
குன்ற முங்குடக்(கு)ஏடக நகரமுங் குணபால்
பொன்ற லங்கிழித் தெழுபொழில் பூவண நகரும்
என்று நாற்பெரு வாயில்கட்(கு) எல்லையா வகுத்தான்.

அப் பெருமதிலை ஆலவாய் மதில் என்று கூறுவர்; அந்த நகரமும் எஞ்ஞான்றும் ஆலவாய் என்னும் பெயரைப் பெறுவதாயிற்று.

பாண்டியன் நகரை அமைத்தல்

பாண்டியன் அந்நகரை முன்போல ஒழுங்கு செய்தான். கொடி களையுடைய நீண்ட திருமதிலும், திருமண்டபமும், திருக்கோபுரமும், திருவீதியும், பூம்பொழில்களும், இவை போன்ற பிறவும் புதியனவாக அமைத்தான்; சோமசுந்தரக் கடவுளுக்குப் புதிய இரத்தின கவசமும், இரத்தின கிரீடமும், வெவ்வேறான இரத்தினாபரணங்களுஞ் செய்து சாத்துவித்தான்.

---

1. இங்கே, ''குரவரும்(பு) உடுத்த வாலெயிற்(று) அழல்விழிப் பகுவாய்ப் பாம்பு மடங்க லாக, ஆலவாய் பொதிந்த மதிமுடித் தனிமுதல்'' என வரும் கல்லாட அடிகள் கருதற்பாலன.

பாண்டியனின் ஆட்சிச் சிறப்பு

அத்திருவாலவாய் நகரத்திலே பலவகைப்பட்ட குடிகளின் பரப்பு அனைத்தையும் குடியேற்றி அளகாபுரியினும் சுவர்க்கத்தினும் சிறக்க வளங்களைப் பெருக்கி, முன்னர்ப் புகழ்பெற்று விளங்கிய [1]குலசேகர பாண்டியனைப்போல வந்த வங்கிய சேகர பாண்டியன் அரசு செய்து கொண்டிருந்தான்.

பல்வ கைப்பெருங் குடிகளின் பரப்பெலாம் நிரப்பிச்
செல்வ வானவன் புரந்தரன் புரத்தினுஞ் சிறப்ப
மல்லன் மாநகர் பெருவளந் துளும்பிட வளர்த்தான்
தொல்லை நாட்குல சேகரன் போல்வரு தோன்றல்.

செய்யுள்—28
ஆகச்செய்யுள்—2349

—x—

## 50. [1]சுந்தரப் பேரம்பெய்த படலம்

விக்கிரம சோழன் பாண்டியன்மீது படையெடுத்து வரல்

அழகிய கயல் எழுதிய கொடியை உயர்த்திய வங்கிய சேகர பாண்டியன் வெண்கொற்றக் குடையின் நிழலிலே நிலமகளும் திருமகளும் கலைமகளும் நீங்காமல் மங்கல வாழ்வு பெற்றுத்திகழ்ந்தனர். அந் நாளிலே தன் யானைப்படையினைக் கொண்டு எதிர்த்த பகைவர் தன் அடியில் வீழ்ந்து வணங்க வாகைமாலை சூடிய விக்கிரம சோழன் வங்கிய சேகர பாண்டியனோடு போர்புரிய எண்ணிக் கடல்போன்ற பெரும் படையுடன் எழுந்தான். அப்போது அவனுக்குக் கயபதி, துரகபதி, நரபதிகளுடன் வடதிசைமன்னர் பலர் துணையாயினர். விக்கிரமசோழன், பல்லியங்கள் இடியேறுபோல முழங்கக் காவிரி யாற்றின் அருகேயுள்ள தான் உறையும் பதியினின்றும் புறப்பட்டுப் பாண்டி நாடு வந்தடைந்தான்.

---

1. இது சுந்தரப் பெயரம்பெய்த படலம் என்றபாடம் உள்ளது.

சோழனின் படைவீரர் பாண்டி நாட்டைப் பாழ்படுத்தல்

விக்கிரம சோழனுடைய படைவீரர் சினந்து பாண்டி நாட்டுப் பசுநிரைகளைக் கவர்ந்து தீமை புரிந்தும், மலர் நிறைந்த தடாகங்களையும் ஏரிகளையும் உடைத்தும், நகருக்குள் வருகின்ற பல பொருள்களையும் வழிப்பறித்துக் கொள்ளையிட்டும் போர் புரிதற்கு அடிகோலினர். பாண்டியன் அதனை அறிந்து, ''இனி யான் யாது செய்வேன்? சோழனின் படையோ அளவற்றது! ஆதலால், அதனை எதிர்த்துப் போர் புரிதல் எனக்கு அரிது; இக்குறைபாட்டைச் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கிக் கூறிக் குறையிரந்து வரம் பெறுவேன்'' என்று கருதித் திருக்கோயிலை அடைந்தான்.

பாண்டியன் இறைவனிடம் முறையிடுதல்

வங்கிய சேகர பாண்டியன்[1] திருக்கோயிலுட் சென்று சோமசுந்தரக் கடவுளை வணங்கி, ''அடியார் வேண்டியவற்றை அருளும் பெருமானே! விக்கிரம சோழன் அடியேனோடு எதிர்த்துப் போர்புரிய வேற்று நில மன்னரின் தொகுதியோடும் எண்ணில்லாதசேனைகளோடும் வந்து பாசறையில் தங்கியுள்ளான்; அவனோடு பொருதற்கு ஒத்த சேனை அடியேனிடத்தில் இல்லையே! படைமிகுந்து எழுந்தபோது நின்னையன்றி எனக்கு இன்று அரண் உண்டோ? இனி என்னால் செய்யக் கடவது யாதுளது?'' என்று விண்ணப்பஞ் செய்தான். அப்பொழுது, சிவபெருமான் ஆகாயத்தில் அசரீரியாய் நின்று, ''பாண்டியனே! நீ முதற்கண் அவனோடு எதிர்த்துப் போர் செய்க; பின்னர் நாமும் அங்குவந்து நினக்குத்துணையாய் நின்று வெற்றி உனக்குக் கிடைக்கும்படி போர்புரிவோம்; இனி நீ அஞ்சல்!'' என்று அருளிச் செய்தார். பாண்டியன் அம்மொழியினைக் கேட்டலும் மனமகிழ்ந்து கண்களிலே ஆனந்த நீர் பொழிய இரு கரங்களையும் சிரமேற் கூப்பிச் சிவபெருமான் திருவடிகளை வணங்கிக்கொண்டு திருக்கோயிலை விட்டு வெளிவந்தான். அப்போது ஒற்றனொருவன் ஓடிவந்து, ''விக்கிரம சோழனுடைய சேனை இடப மலைக்கு அருகில் வந்துவிட்டது!'' என்று கூறினன்.

பாண்டியன் படையும் சோழன் படையும் போர்புரிதல்

பாண்டியன், தேர்மேற்கொண்டு பல வாத்தியங்கள் ஒலிக்கவும், வலம்புரிச் சங்கம் முழங்கவும், நால்வகைப் படைகளும் சூழப் போர் புரியச் சென்றான்; திருவாலவாயின் மதிற்புறத்திலே கடல்போல

1. இவன் பண்டு மதுரை மாநகரம் கண்டவன் ஆவன்.

வளைந்து நிற்கும் சோழனது பெரியபடைக்கு எதிரே, வஞ்சிமாலை சூடிஎழுந்த பாண்டியனின் படைகள் ஆரவாரித்து நெருங்கின. இரு திறத்துப் படைவீரர்களும் வஞ்சினங் கூறி அணி வகுத்துப் போர் புரிவாராயினர்.

தேர் வீரருடன் தேர் வீரரும், யானை வீரருடன் யானை வீரரும், குதிரை வீரருடன் குதிரை வீரரும், வில் வீரருடன் வில் வீரரும், வேல் வீரருடன் வேல் வீரரும், வாள் வீரருடன் வாள் வீ ர ரு ம் சிங்கத்துடன் சிங்கம் போர் புரிவதுபோலப் போர் புரிந்தனர். இந் நிலையிலே பாண்டியன் தேரில் ஏறிச் சோழ மன்னன் எதிர் சென்று போர் முரசு ஒலிக்கப் போர் புரிதல் சூரியனோடு சந்திரன் சென்று போர் புரிதலை ஒக்கும். தாவிச் செல்லும் குதிரைகளின் கனைப் பொலியும், மத நீரை ஆறுபோலப் பெருக்கும் யானைகளின் பிளிறொலியும், தேர்களின் ஒலியும், படைகளோடு படை தாக்கும் பேரொலியும், வீரர்கள் ஆரவாரித்து ஒருவரை ஒருவர் இகழ்ந்து கூறும் பேரொலியும், வீரர்கள் அணிந்த வீரக் கழல்கள் ஒலிக்கும் பேரொலியும், போர் முரசங்களின் பேரொலியும், த ம் மு ள் வேறுபாடு இன்றிக் கலந்து எங்கும் பேரொலியாயிற்று.

துடிக்கும் கொடிய பாம்புபோல வீசுந் து தி க் கை யு ட னு ம், முகிலொடு முகில் தாக்குவதுபோல மாறுபட்டு இடியேறு போலப் பிளிறும் வாயுடனும், இருப்புலக்கையை எடுத்து வீசி அடித் தலால் வரும் குருதியுடனும் உயிருஞ் சோர யானைகள் விழுந்தன.

பகைவர் எய்த அம்பினை விலக்குவாராகிய வீரர், மீண்டும் அவர் எய்த வேறு கணை தம் மார்பினைத் துளைத்தபோது அவரது ஆண்மையினைக் கண்டு மகிழ்வதோடு வெற்றியையும் வியந்து பாராட்டுவர்; தம்மீது வேற்படையினைப் பகைவர் வீச அதனை வீர வாள்கொண்டு வீசித் துண்டித்து வீழ்த்துவர்.

வழுதிப்படை சிதைந்தோடச் சோழன் வெற்றிச்சங்கு ஊதல்

இவ்வாறு சிறிது நேரம் இருதிறத்துச் சேனைகளும் பின்னிடாமல் போர் புரிந்தன. அப்போது சோழன், தனக்கு உதவியாகிய வட நாட்டு வேந்தர் படையோடும் நெருங்கி ஊழித் தீப்போல வெகுண்டு எதிர்த்தான். அவ்வளவிலே பாண்டியனுடைய சேனை சிதைந்து ஓடியது. அவ்வமயம் பாண்டியனின் படைவீரர்கள் வாட்படையோடு வில்லையும் இழந்தனர். பாகர்கள் தேரோடு யானைகளையும் குதிரை களையும் இழந்தனர். அதுகண்ட விக்கிரம சோழன், பாண்டியன்

வலி இழந்து தோற்றான் என்றும், அதனால் வெற்றியும் தன்னுடையதே என்றும், முடிவு செய்து செருக்கினை மேற்கொண்டு வெற்றிச் சங்கை எடுத்து ஊதினான்.

இறைவன் பாண்டியன் சேனைக்குத் தலைவனாக வருதல்

அப்பொழுது முன்னரும் தமது அருள்போலக் குளிர்ந்த தண்ணீர்ப் பந்தர் வைத்தும், சோழனை மடுவில் வீட்டியும், பகைவர் புறங்கொடுக்குமாறு வந்த சோமசுந்தரக் கடவுள் அங்ஙனமே வேட மன்னராய் வடிவு கொண்டு வந்து, ஆற்றலிழந்து துன்பக் கடலுள் மூழ்கிய பாண்டியனது சேனைக்குத் தலைவர் ஆயினர். மேரு மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானாகிய வேடர்பெருமான் தம் வில்லை வளைத்துச் சுந்தரேசன் என்ற தம் திருநாமம் எழுதப் பெற்ற கூரிய கணைகளை, ''வெற்றி கொண்டோம்'' என்று கருதி வெற்றிமாலை சூடி வெண்சங்கினை முழக்கி நின்ற சோழனுடைய சேனைகளின்மீது செலுத்தி நின்றார். அக்கணை ஒவ்வொன்றும் பதினாயிரம் வீரர்களைக் கொன்று உயிரைப் பருகிற்று. சோழன் அதுகண்டு, ''இக்கணை ஒன்றுக்கு இவ்வளவு வலி ஏது'' என்று வியந்து ஐயுறவுற்று, அக்கணையொன்றைக் கொணர்வித்துப் பார்த்தான்; அதில், 'சுந்தரேசன்' என்று வரைந்திருத்தலை நோக்கினான்; ''இது பாண்டியனுக்கு ஆலவாய் அண்ணல் துணைபுரிந்த செயல்'' என்று கருதிப் பயந்து படைகளுடன் மீண்டு போவானாயினான்.

பின்னிட்டோடும் சோழனை வடவர் அழைத்து வந்து போரிடல்

அங்ஙனமே திரும்பிப் போகும் சோழனை அவனுக்குப் போர்த் துணையாகி வந்த வடநாட்டிலுள்ளாராகிய துருக்கரும் ஒட்டியரும் பிறருமாகிய அனைவரும் கூடி, ''நில் நில்'' என்று அவனைத் தடுத்து நிறுத்திச் சினந்து வைது, ''நீ போருக்குத் தோற்றேடுகின்றனையே! இது நின் செயலானால் வீரம் யாரிடத்தது? உன் பெருமை என்னாகும்? ஆதலால், நீ போகாதே; வா'' என்று கூறி அழைத்துக்கொண்டு, சினந்து இடிபோல ஆரவாரித்துப் பாண்டியன் சேனைமேற் சென்று வில்லை வளைத்துத் தனித்தனி ஒவ்வோரிடத்தில் நின்று முனிவர் சாப மொழியினும் விரைந்து செல்லும் அம்புகளைத் தொடுத்து விடுத்துத் தூர்த்தனர். அதனை வேட வடிவங் கொண்டு வந்த சோமசுந்தரக் கடவுள் கண்டு, பெரிய வில்லை வளைத்து ஒரு அம்பினை தொடுத்து விடுத்து அவர்கள் விடுத்த கணைகளையெல்லாம் அழித்துவிட்டுப் பின்னும் பத்துப் பத்துக் கணைகளை விடுத்து ஆயிரம் தேரையும் ஆயிரம் யானைகளையும், ஆயிரம் வீரர்களையும் கொன்றார்; அதன் பின்னும் நூறு நூறு கணைகளை விடுத்துப் பதினாயிரம் தேர்களையும், பதினாயிரம் யானைகளையும் பதினாயிரம் வீரர்களையும் அழித்தார்; அதன் பின்னும் ஆயிரம் கணைகளை விடுத்து, இலட்சம் தேர்களையும், இலட்சம் யானைகளையும், இலட்சம் குதிரைகளையும், இலட்சம் வீரர்களையும் தொலைத்தார்.

# "ஸ்ரீகுமரகுருபரர்"

## சமய இலக்கியத் திங்கள் இதழ்

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுள் சந்தா | (உள்நாடு) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | (உள்நாடு) | ரூ. | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா) | ரூ. | 10—00 |
| | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின் பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள் பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

---

## ஸ்ரீ காசிமடத்தின் புதிய வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மை நெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் திருவெண்பாவும் | ,, | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| இருபா இருபஃது | ,, | விலை ரூ. | 1—25 |
| போற்றிப் பஃறொடை | ,, | விலை ரூ. | 1—20 |
| நெஞ்சுவிடு தூது | ,, | விலை ரூ. | 1—50 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. | 3—00 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு (கோ. வன்மீகநாதன்) | | விலை ரூ. | 15—00 |
| திருவருட்பயன் - நிரம்ப அழகிய தேசிகர் உரையுடன் | | விலை ரூ. | 5—00 |
| அபிராமி அந்தாதி தெளிவுரையுடன் | | விலை ரூ. | 1—00 |
| திருவிளையாடற்புராணம் உரைநடை (மதுரைக் காண்டம்) | | விலை ரூ. | 4—00 |
| திருவிளையாடற்புராணம் உரைநடை (கூடற் காண்டம்) | | விலை ரூ. | 3—50 |
| திருமுறைகண்ட புராணம் சேக்கிழார் புராணம் | | விலை ரூ. | 0—75 |
| திருத்தொண்டர் புராணம் (மூலம்) | | விலை ரூ. | 12—00 |

விற்பனையாளர்களுக்கு 20% கழிவு உண்டு.

ரூ. 1000/க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச்செலவு இலவசம்

முகவரி:- மேலாளர்:

ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள் 612504

(தஞ்சை மாவட்டம்)

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி.
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - Pin 612 504